# ஈழநாடு


மலர்:18, 20 ஜனவரி 2012 இதழ் 41
பிரதம ஆசிரியர்: T. K. பரமேஸ்வரன் 416-841-9600




## அரசு- கூட்டமைப்பு பேச்சுவார்த்தையில் இந்தியா மத்தியஸ்தம் வகிக்க வேண்டும்

## கிருஸ்ணாவுக்கு யாழ்.ஆயர் மகஜர்

இலங்கை அரசுக்கும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சு வார்த்தையின் வழி இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய தீர்வொன்றிற்கு வழி செய்யும்படி இந்திய அரசை வினையமாக வேண்டுகிறோம். இந்திய அரசானது புவிசார் அரசியல் (6ம் பக்கம் பார்க்க)

## இந்தியா தலையிடத் தவறினால் பேச்சுக்கள் முறியும்! கிருஷ்ணாவிடம் எடுத்துக் கூறியது கூட்டமைப்பு

### தெரிவுக்குழுவுக்கு வரும் வரை பேச்சுக்கள் இல்லை - அரசு

இனப்பிரச்சினைக்கு விரைவானதொரு அரசியல் தீர்வைக் காண்பதற்கு சிறிலங்கா அரசாங்கத்தை வலியுறுத்த வேண்டியது இந்தியாவின் கடமை என்று கொழும்புக்குப் பயணம் மேற் கொண்ட இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஸ்ணாவிடம் தமிழ்த் தேசியக் (6ம் பக்கம் பார்க்க)

## அரசாங்கத்தை அதிர்ச்சியில் உறைய வைத்த தமிழ்த்தேசியக் கூட்டமைப்பின் அறிக்கை

கற்றறிந்த பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக் குழுவின் அறிக்கை குறித்து தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆராய்ந்து வெளியிட்டுள்ள பொருள் பொதிந்த உத்தியோகபூர்வ அறிக்கை அரசாங்கத்தை அதிர்ச்சிக்குள்ளாக்கியுள்ளது. அந்த அறிக்கையின் சாராம்சத்தை இங்கு தருகிறோம். (18ம் பக்கம் பார்க்க)

## எதற்கெடுத்தாலும் புலிப்பூச்சாண்டி

## வாரம் ஒரு குறள்

"கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கணி"

பொருள்:- ஒருவர்க்கு வாழ்வும் தாழ்வும் உலக இயற்கை. இந்த இரு நிலைமையிலும் நடுவுநிலையாக இருந்து உறதி காட்டுவதே பெரியோர்க்கு அழகாகும்.

- திருக்குறள் கலைஞர் உரை


**EELANADU**
105 DINSDALE DR
WOODBRIDGE - ON
L4H 2M4 - CANADA

416 841 9600 / 905 653 3000
eelanadu1993@ gmail.com


### வாசகர்கள் வர்த்தகர்கள் கவனத்திற்கு!

எமது ஈழநாடு அலுவலகம் திங்கள் முதல் ஞாயிறு வரை வாரத்தில் ஏழ நாட்களும் காலை 9.00 மணி முதல் இரவு 12.00 மணி வரை திறந்திருக்கும். மரணஅறிவித்தல், நினைவஞ்சலி மற்றும் முக்கியமான அறிவித்தல்கள் மட்டுமே வியாழன் இரவு 12.30 மணி வரை ஏற்றுக் கொள்ளப்படும்.

உங்கள் அபிமான ஈழநாட்டில் விளம்பரம், அறிவித்தல் செய்ய விரும்புவோர் அலுவலகத்துடன் (416) 841 9600 அல்லது (905) 653 - 3000 என்ற தொலைபேசியில் தொடர்பு கொண்டு விட்டு கீழ் காணும் இடங்களில் அறிவித்தல்களை ஒப்படைக்கலாம். தங்கள் ஆதரவிற்கு நன்றி.

1 SANKAR INTERNATIONAL
2425 EGLINTON AVE EAST
(EGLINTON / KENNDY)

2 JAFFNA SUPER STORES
1221 MARKHAM RD - 14
(MARKHAM / EELESMERE)

3 NEW OCEAN SUPER MARKET
2820 MARKHAM RD
(MARKHAM / MCNICOLL)

4 AGP MART
4A WADE AVE
TORONTO

5 KALAIMAHAL BOOK DEPOT
595 PARLIAMENT ST
Toronto

6 UTHAYA SUPER MARKET
5010 STEELES AVE WEST
ETOBICOKE

7 VIJAYAS SILK
27 DUNDAS ST WEST
MISSISSAUGA

**மொன்றியல்**
MARCHE THURGA
444 JEANTALON WEST
(514) 276 - 9262



# காணி, காவல்துறை அதிகாரங்கள் பற்றிப் பேச தெரிவுக்குழுவுக்கு வரவேண்டும் என்கிறது அரசாங்கம்

## 13 பிளஸ் ஜெனிவா மாநாட்டில் ஆதரவு திரட்டும் யுக்தியா?

அரசியலமைப்பின் 13வது திருத்தச் சட்டத்துக்கு அப்பால் தீர்வு வழங்குவது தொடர்பாகப் பேச்சுக்களை நடத்த சிறிலங்கா அரசாங்கம் தயார் என்று இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங்கிற்கு சிறிலங்கா அதிபர் கொடுத்திருந்த வாக்குறுதி தொடர்பான நிலைப்பாட்டில் எந்த மாற்றமும் இல்லை என்று சிறில்ங்காவின் ஊடகத்துறை அமைச்சர் கெஹலிய ரம்புக்வெல கூறியுள்ளார். கொழும்பில் நேற்று அமைச்சரவை முடிவுகளை அறிவிக்கும் செய்தியாளர் சந்திப்பிலேயே அவர் இவ்வாறு கூறியுள்ளார்.

"அரசியலமைப்பின் 13வது திருத்தச் சட்டத்துக்கு அப்பாற்பட்ட தீர்வின் ஒரு அங்கமாக செனட் சபையை உருவாக்கும் திட்டமொன்றை சிறிலங்கா அரசாங்கம் கொண்டுள்ளது. இதன் ஊடாக சிறுபான்மை மக்கள் பிரதிநிதிகளை உள்வாங்கி ஜனநாயகத்தைப் பேண முடிவதுடன் மாகாண சபைக்கும், மத்திய அரசுக்கும் இடையிலான இடைவெளியைக் குறைத்து நெருக்கத்தை ஏற்படுத்த முடியும்.

செனட் சபை ஆலோசனைக் குழு போன்று செயற்படும். இது தொடர்பாகப் பேச்சுக்களை நடத்த சிறிலங்கா அரசாங்கம் தயாராகவுள்ளது. இது பற்றிப் பேசுவதற்குச் சிறந்தொரு தளமாகவே நாடாளுமன்றத் தெரிவுக் குழு உருவாக்கப்பட்டுள்ளது.

இதன் ஊடாகப் பேச்சுக்களை நடத்தி தீர்வொன்றைப் பெற்றுக் கொள்ள முடியும். இதற்காகவே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பையும் தெரிவுக்குழுவில் பங்கு கொள்ளுமாறு சிறிலங்கா அரசாங்கம் கூறி வருகிறது. எந்தவொரு விடயமாக இருந்தாலும் அது நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் ஊடாகவே ஆராயப்பட வேண்டும்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு எந்த விதமான பிரச்சினைகள் இருந்தாலும் அது பற்றி தெரிவுக்குழுவில் பங்கெடுத்து விவாதிக்க முடியும். மாகாணங்களுக்கான காணி மற்றும் காவல் துறை அதிகாரங்கள் குறித்து சிறிலங்கா அரசாங்கம் அக்கறை கொண்டுள்ளது. எனினும் இதுபற்றி தெரிவுக் குழுவில் பேச்சு நடத்தியே தீர்வொன்றுக்கு வரவேண்டும்.

பேச்சுக்களுக்கு முன்னர் சிறிலங்கா அரசாங்கத்தின் நிலைப்பாட்டை அறிவிக்க வேண்டுமென கூட்டமைப்பு நிபந்தனை விதிக்கிறது. இவ்வாறு நிபந்தனை விதிப்பதை விடுத்து இந்த விடயம் தொடர்பாக பேச்சு நடத்தி தீர்வொன்றைப் பெற்றுக் கொள்ள அவர்கள் முன்வர வேண்டும்" என்றும் அவர் மேலும் தெரிவித்துள்ளார்.

இனப்பிரச்சினைக்கான தீர்வாக செனட் சபை அமைக்கப்படுவதை இந்தியா ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனாலும் தீர்வு குறித்து பாராளுமன்றத் தெரிவுக் குழுவே தீர்மானிக்கும். இதற்கு வெளியில் எத்தனை சுற்றுப் பேச்சுக்கள் நடைபெற்றாலும் அவை தமிழ் மக்களின் அரசியல் பிரச்சினைக்குத் தீர்வாக அமையாது என்று அரசாங்கம் திட்டவட்டமாக அறிவித்துள்ளது.

இனப்பிரச்சினை விடயத்தில் தன்னிச்சையாக தீர்வை ஏற்படுத்தி சர்வாதிகாரியாக செயற்பட நாம் விரும்பவில்லை. அதேபோன்று நிபந்தனைகளுக்கு கட்டுப்பட்டும் செயற்பட முடியாது. எனவே தீர்வுக்கான அனைத்து விடயங்கள் குறித்தும் தெரிவுக் குழுவிலேயே பேசப்படல் வேண்டும் என்றும் அரசாங்கம் சுட்டிக்காட்டியுள்ளது.

அரசியல் தீர்விற்கான விடயங்கள் குறித்து பாராளுமன்ற தெரிவுக் குழுவில் பேசுவதே சிறந்தது. இதற்கு வெளியில் எவ்வளவு பேசினாலும் இறுதியில் பாராளுமன்றத்திற்கே வர வேண்டும். எவ்வாறாயினும் இனப்பிரச்சினைக்கான தீர்வுக்கான அதிகாரப் பகிர்வு குறித்தோ அல்லது செனட் சபை அமைப்பது தொடர்பாகவோ பாராளுமன்ற தெரிவுக் குழுவிலேயே பேசப்படல் வேண்டும்.

பொலிஸ் மற்றும் காணி அதிகாரங்கள் வழங்குவதில் பிரச்சினைகள் உள்ளன. 13ஆவது திருத்தச் சட்டத்தை முழு அளவில் நடைமுறைப்படுத்துவது குறித்தும் உத்தியோகபூர்வமாக பாராளுமன்றத்திலேயே பேசப்படல் வேண்டும்.

எவ்வாறாயினும் மாகாண சபைகளுக்கு முழு அளவிலான அதிகாரங்கள் வழங்குவது என்பது பரந்த விடயமாகும். இதனை குறிப்பிட்ட இரு தரப்பு பேசுவதை விட பாராளுமன்றத்தில் அங்கத்துவம் வகிக்கும் அனைத்து கட்சிகளும் ஒன்றிணைந்து பேசுவதன் ஊடாகத் தான் தீர்மானத்துக்கு வர முடியும்.

செனட் சபை ஊடாக தமிழ் மக்களின் அரசியல் உள்ளிட்ட ஏனைய பிரச்சினைகளுக்கு தீர்வு காண்பது தொடர்பாக அரசாங்கம் ஆராய்ந்து வருகின்றது. இதற்கு இந்திய பிரதமர் மன்மோகன்சிங்கும் விருப்பம் தெரிவித்துள்ளார். மத்திய அரசில் இருந்து மாகாண சபைகள் முழு அளவில் தனித்துச் செயற்பட ஆரம்பித்தால் அது பிரச்சினைகளையே தோற்றுவிக்கும். இதற்காக சிறுபான்மை மக்களின் பிரதிநிதிகளை கூடுதலாக உள்வாங்கி செனட்சபை உருவாக்கப்படுமேயானால் மத்திய அரசிற்கும் மாகாண சபைகளுக்கும் இடையிலும் தொடர்புகள் ஏற்பட்டு நிலைமை சுமுகமாக அமையும். எனவே தான் அரசாங்கம் செனட் சபையினை அமைப்பது குறித்து யோசனையை முன் வைக்கின்றது. எவ்வாறாயினும் இறுதித் தீர்மானம் பாராளுமன்ற தெரிவுக் குழுவின் கைகளிலேயே தங்கியுள்ளது என்றார்.

இலங்கைத்தீவின் அரசியல் வெளியில் 13 பிளஸ் மீண்டும் பேசு பொருளாகியுள்ளது. இந்தியாவின் முக்கிய அரசியல் பிரமுகர்களின் சிறிலங்காவுக்கான பயணங்களின் போது 13 பிளஸ் என்ற 13வது திருத்தச்சட்டத்துக்கு அப்பால் எனும் விடயம் பேசப்படுவது வழமையாகியுள்ளது.

இந்நிலையில் இந்தியாவின் வெளியுறவுத்துறை அமைச்சர் கிருஸ்ணாவின் சிறிலங்காவுக்கான பயணத்தையொட்டிய இன்றைய இலங்கைத்தீவின் அரசியலில்13 பிளஸ் பேசு பொருளாகியுள்ளது.

இந்திய வெளியுறவுத்துறை அமைச்சருடனான சந்திப்பின் போது, இலங்கைத்தீவின் இனநெருக்கடிக்கு தீர்வைக் காண அரசியல் அமைப்பின் 13 திருத்தச் சட்டத்துக்கு அப்பால் செல்ல தான் உறுதியாக இருப்பதாக, சிறிலங்காவின் அரசுத் தலைவர் மகிந்த ராஜபக்ச கூறியிருந்தார்.

இந்நிலையில் 13ஆவது திருத்தச் சட்டத்திற்கு அப்பால் என்னென்ன விடயங்களைப் பகிர்வது என்பது பற்றித்தான், இனித் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு அரசுடன் பேசும் என தமிழ்த் தேசியக்கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ. சுமந்திரன் தெரிவித்துள்ளார்.

சிறிலங்கா முஸ்லிம் காங்கிரஸ், விடுத்துள்ள குறிப்பொன்றில் இனப்பிரச்சினைக்கு 13ஆவது அரசமைப்புத் திருத்தத்திற்கு அப்பால் சென்று தீர்வைக் காண்பதற்கு அரசிலிருக்கும் கடும்போக்காளர்கள் உட்பட அனைத்துத் தரப்பினரும் அரசுத் தலைவருக்கு ஒத்துழைப்பு வழங்கவேண்டும் என தெரிவித்துள்ளது.

இந்நிலையில் 13 பிளஸ் குறித்தான வாதப் பிரதிவாதங்களில் தன்பங்கிற்கு கருத்துரைத்துள்ள சிறிலங்காவின் பிரதான எதிர்கட்சியாக ஐ.தே.க, ஜெனிவா ஐ.நா மனித உரிமைச் சபை கூட்டத்தொடரின் போது தனக்கு ஏற்படப் போகும் சிக்கலில் இருந்து தப்பித்துக் கொள்ளவே 13 பிளஸ் எனும் பல்லவியை (33ம் பக்கம் பார்க்க)




IMMIGRATION SPECIALISTS FOR CANADA AND THE U.S.

## வழங்கும் சேவைகள்

எங்களுடைய சேவைகள் வழங்கும் பிரிவு கனடாவுக்கான Support work விசாக்கள் மற்றும் அமெரிக்காவுக்கான பாடசாலை திட்டத்தில் பணியாற்றுவதற்கான மாணவர் விசாக்களுக்கு தகுதி பெறுவதற்கான வேலைக்குரிய வளங்களை அளிக்கிறது.

## துரிதமான குடிவரவு

**மூன்று மாதங்களில்**
வேலை அனுமதிப் பத்திரம்
மாணவர் விசா

**8-12 மாதங்களில்**
கனடிய $150,000 களுடன்
முதலீட்டாளர்களுக்கு
விவசாயிகள், கலைஞர்கள்
விளையாட்டு வீரர்கள்
அனுபவமுடைய வகுப்பினர்

## Canadian Categories

## கனடாவுக்கான வகைகள்

- குடும்ப பொறுப்பேற்கும் விண்ணப்பங்கள்
- பயிற்சி பெற்ற வேலையாட்கள் & தொழில் துறையினர்
- கனடிய அனுபவமுள்ள வகுப்பினர்
- முதலீட்டாளர்கள், வர்த்தகத்துறையினர் & சுயதொழில் வகுப்பினர்
- விவசாயிகள் கலைஞர்கள் விளையாட்டு வீரர்கள்
- மாகாண பிரிவுக்கு உட்பட்டவர்கள்
- பாதுகாக்கப்படவேண்டிய ஆட்கள் & அகதிகள்
- மனிதாபிமான & கருனை விண்ணப்பங்கள்
- வேலை செய்வதற்கான விசாக்கள்
- கல்வி கற்பதற்கான விசாக்கள்
- விஜயம் செய்வதற்கான விசாக்கள்
- சர்வதேச உடன்படிக்கைகள்

**தினசரி
24 மணித்தியாலங்களும்
கிழமையின் 7 நாட்களும்
நாம் சேவை
வழங்குகின்றோம்**





## அமெரிக்காவுக்கான வகைகள்

- கிறீன் காட்ஸ்
- தொழில் துறைசார் குடிவரவு
- H-1B தற்காலிக தொழில்துறை வேலை விசாக்கள்
- குடும்ப பொறுப்பேற்பு நிரந்தர வசிப்புரிமை
- K-1 அமெரிக்க பிரஜைகளின் காதலர்களுக்கான விசா
- E1/E-2 முதலிட்டாளர்கள் / வர்த்தகர் விசாக்கள்
- J விலக்களிக்கப்பட்டவர்கள்
- தேசிய அக்கறையுள்ள விலக்களிக்கப்பட்டோர்
- வெளியேற்றுதல் / நாடுகடத்தலுக்கு ஆஜராதல்
- எல்லைப்புறம் / உள்வரவுக்கு ஆஜராதல்
- TN விசாக்கள்




# 30
## வருடத்துக்கு மேற்பட்ட அனுபவமுள்ள குடிவரவு நிபுணர்கள்

**இலவச ஆலோசனைக்கு அழையுங்கள்**

தமிழ், சிங்களம், ஹிந்தி, பஞ்சாபி, உருது, கின்ட்கோ, புஸ்தோ மற்றும் அராபிய மொழிகளில் சேவைகள் வழங்கப்படுகின்றது

**South Asian Associate Members**

Global conglomerate and network of offices in major cities throughout South Asia including Ahmedabad, Ludhiana, New Delhi, Bombay, Keral, Ahmedabad, Gujrat, Calcutta, Bangalore, Columbo, Islamabad, Karachi, Lahore, Rawalpindi, Gujranwala, Sialkot, Sheikhupura, Faisalabad, Multan and Peshawar, providing professional services to our clients from South Asia who wish to immigrate to Canada and U.S.A.

**U.S. Associate Members**

Over 50 years experience in U.S. immigration; Licensed in the various U.S. States including, New York, New Jersey, Illinois, and California; Former President of the Immigration Lawyers' Association; Recipients of numerous governmental and other awards.

**Canadian Associate Members**

Over 30 years experience in Canadian and U.S. immigration; Formerly worked as Assistant Parliamentary Council; Also with Department of External Affairs, Privy Counsel, Department of Justice, Canadian Transport Commission, Canada Immigration and the Judiciary, including Assistant to a former Crown prosecutor, currently a Judge of the Supreme Court of Canada.

| TORONTO | MONTREAL | OTTAWA | REGINA |
|---|---|---|---|
| 40 King Street West, Suite 3607 | 1250 Rene-Levesque Blvd. W., Suite 2200 | 45 O'Connor Street, Suite 1150 | 1914 Hamilton Street, Suite 300 |
| Toronto, ON M5H 3Y2 | Montreal, QC H3B 4W8 | Ottawa, ON K1P 1A4 | Regina, SK S4P 3N6 |
| Tel: 416-366-1300 | Tel: 514-596-5959 | Tel: 613-233-1300 | Tel: 306-775-3331 |
| Fax: 416-366-1301 | Fax: 514-934-4640 | Fax: 613-233-1301 | Fax: 306-775-3338 |

E-mail: cic@codinainternational.com, Web: www.codinainternational.com

# அரசு- கூட்டமைப்பு பேச்சுவார்த்தையில் இந்தியா மத்தியஸ்தம் வகிக்க வேண்டும் கிருஸ்ணாவுக்கு யாழ்.ஆயர் மகஜர்

இலங்கை அரசுக்கும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சுவார்த்தையின் வழி இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய தீர்வொன்றிற்கு வழி செய்யும்படி இந்திய அரசை வினையமாக வேண்டுகிறோம்.

இந்திய அரசானது புவிசார் அரசியல் நோக்கங்களையும் தாண்டி உண்மையாக தமிழ் மக்களின் பிரச்சினைக்கு தீர்வு காண உழைக்க வேண்டும். இந்த பேச்சுவார்த்தையில் இந்திய அரசு மத்தியஸ்தம் வகிப்பதை இலங்கை அரசு எதிர்க்கப் போவதில்லை.

இவ்வாறு யாழ் ஆயர் வண. தோமஸ் சவுந்தரநாயம் ஆண்டகை இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணாவிடம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.



யாழ்ப்பாணத்திற்கு உத்தியோகபூர்வ விஜயமொன்றை மேற்கொண்டிருந்த இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா கடந்த 18 ஜனவரி 2012 புதன்கிழமை மீள்குடியேற்றப்பட்ட மக்களுக்கான உதவிகளை வழங்கும் நிகழ்வில் கலந்து கொண்டார். இந்த நிகழ்வில் கலந்துகொண்ட யாழ் ஆயர் இந்திய அரசின் மத்தியஸ்தத்தை கோரும் மகஜரொன்றை இந்திய வெளிவிவகார அமைச்சரிடம் கையளித்தார்.

இந்த மகஜரின் பிரதியொன்று கொழும்பிலுள்ள இந்திய உயர் ஸ்தானிகராலயத்திற்கும் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. யாழ் ஆயரால் கையளிக்கப்பட்ட இம் மகஜரில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது

இலங்கை அரசானது தமிழ் சிறுபான்மையினருக்கு பொருத்தமான அரசியல் தீர்வொன்றை அடைவதற்காக தமிழ் தேசிய கூட்டமைப்புடன் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது. இலங்கையில் தமிழர் எதிர்நோக்கும் பிரச்சினைகளுக்கு தீர்வு காண இது ஒரு வழி என இதனை இந்திய வெளிவிவகார அமைச்சு வரவேற்றிருக்கிறது.

ஆனால் இலங்கை அரசானது பேச்சுக்களின் வழி மாகாண சபைகள் இயங்குவதற்கு தேவையான அதிகாரங்களை வழங்குவதில் எள்ளவும் விட்டுக் கொடுக்கவில்லை. 30 ஆண்டு கால உள்நாட்டு யுத்தத்தின் பின்னரும் பெரும்பான்மையை கொண்ட இலங்கை அரசு மத்தியில் இருந்து தமது அதிகாரங்களை வழங்க தாயாராக இல்லை.

எனவே இலங்கை அரசிற்கும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சுவார்த்தையின் வழி இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய தீர்வொன்றிற்கு வழி செய்யும்படி இந்திய அரசை வினையமாக வேண்டுகிறோம்.

இல்லாவிடின் இப்பேச்சுக்கள் நீண்டு கொண்டு போவதோடு இலங்கை அரசானது புதிய வழிகளை தேடி அரசியல் பிரச்சினைக்கு தீர்வினை காணும் எண்ணத்தை பின் தள்ளிக் கொண்டே போகும்.

எனவே இந்திய அரசானது புவியியல் நோக்கங்களையும் தாண்டி உண்மையாக தமிழ் மக்களின் பிரச்சினைக்கு தீர்வு காண உழைக்க வேண்டும். இந்த பேச்சுவார்த்தையில் இந்திய அரசு மத்தியஸ்தம் வகிப்பதை இலங்கை அரசு எதிர்க்க போவதில்லை.

இந்திய சமாதான உடன்படிக்கைக்கு முன்பு இந்திய அரசு இது போன்ற மத்தியஸ்த பணியை ஆற்றிய போதும் தமிழ்த் தலைவர்கள் இந்திய சமாதான ஒப்பந்தத்தின் தன்மைகளை உணராமலும் தமக்குள் கெட்டித்தனமாக ஒன்றிணைந்து செயற்படாமலும் தூக்கி எறிந்து விட்டனர்.

எனவே இந்திய வெளிவிவகார அமைச்சானது இந்த சந்தர்ப்பத்தை தவறவிடாமல் எமது வேண்டுகோளை பரிசீலித்து எமது உதவிக்கு வரும்படி அன்பு வேண்டுகோள் விடுக்கிறோம்.

போரினால் தாக்கப்பட்டு மீள்குடியேற்றம் செய்யப்படுகின்ற மக்கள் மேல் தாங்கள் காட்டும் மனிதாபிமான கரிசனைக்கு நன்றி தெரிவிக்கிறோம் என குறிப்பிடப்பட்டள்ளது.

இவ்வாறு யாழ் ஆயர் வண. தோமஸ் சவுந்தரநாயம் ஆண்டகையால் இந்திய வெளிவிவகார அமைச்சருக்கு கையளிக்கப்பட்ட மகஜரில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# இந்தியா தலையிடத் தவறினால் பேச்சுக்கள் முறியும்! கிருஷ்ணாவிடம் எடுத்துக் கூறியது தமிழ்தேசியக்கூட்டமைப்பு தெரிவுக்குழுவுக்கு வரும் வரை பேச்சுக்கள் இல்லை - அரசு

இனப்பிரச்சினைக்கு விரைவானதொரு அரசியல்தீர்வைக் காண்பதற்கு சிறிலங்கா அரசாங்கத்தை வலியுறுத்த வேண்டியது இந்தியாவின் கடமை என்று கொழும்புக்குப் பயணம் மேற்கொண்ட இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஸ்ணாவிடம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எடுத்துக் கூறியுள்ளது.

கொழும்பு நகரிலுள்ள விடுதியொன்றில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன் தலைமையில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் சுரேஸ் பிறேமச்சந்திரன், எம்.ஏ.சுமந்திரன், செல்வம் அடைக்கலநாதன், பொன்.செல்வராசா, மாவை சேனாதிராசா ஆகியோர் இந்திய வெளிவிவகார அமைச்சரைச் சந்தித்துப் பேசினர். இந்தச் சந்திப்பு சுமார் 45 நிமிடங்கள் வரை இடம் பெற்றது.

இந்தச் சந்திப்பின் போது தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு ஒதுக்கப்பட்ட 45 நிமிடங்களும் சிறிலங்கா அரசுடன் நடத்தப்படும்பேச்சுக்கள் அதன் போக்கு தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு எழுந்துள்ள அவநம்பிகைகள் மற்றும் இந்தியாவின் தலையீடு குறித்தே பேசப்பட்டுள்ளது. ஏனைய எந்த விடயங்கள் குறித்தும் பேசப்படவில்லை என்றும் தெரியவருகிறது.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு பிரதிநிதிகள் கூறிய விடயங்களை செவிமடுப்பதிலேயே இந்திய வெளிவிவகார அமைச்சர் கவனம் செலுத்தியதாகவும் அது பற்றிய மேலதிக விளக்கங்களைக் கோருவதில் அக்கறை காண்பிக்கவில்லை என்றும் தகவல்கள் தெரிவிக்கின்றன. மேலும் இதுகுறித்து இந்தியத் தரப்பில் எந்த வாக்குறுதிகளும் அளிக்கப்பட்டதாகவும் தகவல் இல்லை.

அதேவேளை இந்தச் சந்திப்புக் குறித்து நாடாளுமன்ற உறுப்பினர் சுரேஸ் பிரேமச்சந்திரன் கருத்து வெளியிடும் போது "வடக்கு கிழக்கு மாகாணங்களுக்கு கூடுதல் அதிகாரம் வழங்குவது மற்றும் இனப்பிரச்சினைக்கு அரசியல்தீர்வு காண்பது தொடர்பாக சிறிலங்கா அரசுடன் கடந்த ஒரு ஆண்டு காலமாக பலமுறை பேசிவிட்டோம். ஆனாலும் இந்தப் பேச்சுக்களில் முன்னேற்றம் ஏதும் வரவில்லை. பேச்சுக்களில் அக்கறையற்ற நிலையிலேயே சிறிலங்கா அரசாங்கம் உள்ளது.

இந்தியாவிடம் பல முறை வாக்குறுதிகளை அளித்திருந்தும் இழுத்தடிப்பு செய்யும் நோக்கிலேயே சிறிலங்கா அரசாங்கம் செயற்பட்டு வருகிறது.

காணி தொடர்பான அதிகாரங்கள், காவல்துறை அதிகாரங்கள் போன்றவற்றை வடக்கு,கிழக்கு மாகாணங்களுக்கு வழங்கப் போவதில்லை என்பதில் சிறிலங்கா அதிபர் உறுதியாக இருக்கிறார்.

இந்தியாவின் ஏற்பாட்டிலேயே இந்தப் பேச்சுக்கள் நடந்தன. எனவே இந்தியா இந்த விடயத்தில் முக்கிய பாத்திரத்தை வகிக்க வேண்டும். இந்தியா இந்த விடயத்தில் தலையிட்டு பங்களிக்கத் தவறினால் இந்தப் பேச்சுக்கள் தோல்வியடையும். பேச்சுக்களைத் தொடர முடியாத நிலை ஏற்படும். வடக்கு கிழக்கு நிலைமைகளில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. முன்னைய நிலையே தொடர்கிறது என்பதை இந்திய வெளிவிவகார அமைச்சருக்கு எடுத்துக் கூறியுள்ளோம்." என்று தெரிவித்துள்ளார்.

இதற்குப் பதிலளித்த இந்திய வெளிவிவகார அமைச்சர் சிறிலங்கா வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பீரிசை சந்திக்கும் போது இதுபற்றிப் பேசுவதாகக் கூறியுள்ளார்.

இதேவேளை இனப்பிரச்சினைக்கு அரசியல்தீர்வு காண்பதற்கான தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் நடத்தப்படும் பேச்சுக்களை சிறிலங்கா அரசாங்கம் இடைநிறுத்தியுள்ளது.

நாடாளுமன்றத் தெரிவுக்குழுவுக்கு தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு பிரதிநிதிகளை நியமிக்கும் வரை இந்தப் பேச்சுக்கள் நடைபெறாது என்று சிறிலங்கா வெளிவிவகார அமைச்சு கூறியுள்ளதாக கொழும்பு ஊடகம் ஒன்று தகவல் வெளியிட்டுள்ளது.

17,18,19 என இந்த மாதத்தில் தொடர்ந்து மூன்று நாட்கள் பேச்சுக்களை நடத்த சிறிலங்கா அரசாங்கம் நாள் குறித்திருந்தது.

எனினும் பேச்சுக்களுக்காகச் சென்ற தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் பிரதிநிதிகள் குழு சிறிலங்கா அரசுப் பிரதிநிதிகள் வராததால் ஏமாற்றத்துடன் திரும்பியதாகத் தகவல்கள் கூறுகின்றன.

அதேவேளை அரசியல்தீர்வு தொடர்பாக



தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் மாத்திரம் பேச முடியாத என்றும் எல்லாக் கட்சிகளுடனும் பேசப்பட வேண்டும் என்றும் கூறியுள்ள சிறிலங்கா வெளிவிவகார அமைச்சு அதற்கு நாடாளுமன்றத் தெரிவுக்குழுவில் கூட்டமைப்பு இடம் பெற வேண்டும் என்று கூறியுள்ளது.

தெரிவுக்குழுவுக்கு பெயர்களை பரிந்துரைக்கும் வரை சிறிலங்கா அரசாங்கம் கூட்டமைப்புடன் எந்த இடத்திலும் பேச்சுக்களை நடத்தப் போவதில்லை என்றும் சிறிலங்கா வெளிவிவகார அமைச்சு குறிப்பிட்டுள்ளது. முன்னதாக இந்திய வெளிவிவகார அமைச்சருடன் இணைந்து பங்கேற்ற செய்தியாளர் சந்திப்பில் பேசிய சிறிலங்கா வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பீரிஸ், தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சுக்களை நிறுத்தவில்லை என்றார்.

# சிறிய பலத்தைக் கொண்ட கூட்டமைப்பிடம் பெரும்பான்மையினர் அடிபணிவதா?

இலங்கையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு 4 சதவீதமான பலம் மட்டுமே உள்ளது. ஆனால் எமக்கு 90 சதவீதமான பலம் உள்ளது. இந்த நிலையில் 4 வீதமான பலத்தைக் கொண்டுள்ள தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு நாம் அடி பணிவதா?' என ஜாதிக ஹெல உறுமயவின் தலைவரும் சிறிலங்காவின் அமைச்சருமான சம்பிக்க ரணவக்க கேள்வி எழுப்பியுள்ளார்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் இனவாதத்துக்கு அடிபணியாது சிங்களவர்கள் அனைவரும் ஓரணியில் திரள வேண்டும் எனவும் கொழும்பு மகாவலி கேந்திர நிலையத்தில் நடைபெற்ற 'உண்மைகளைக் கண்டறிவதற்கான நல்லிணக்க ஆணைக்குழுவின் கற்றுக் கொள்ளாத பாடங்கள்' என்ற தலைப்பிலான கருத்தரங்கில் உரையாற்றிய போதே அவர் இவ்வாறு கேள்வி எழுப்பினார். அவர் தனது உரையில் மேலும் முக்கியமாகக் குறிப்பிட்டதாவது:

'உண்மைகளைக் கண்டறிவதற்கான நல்லிணக்க ஆணைக்குழு சர்வதேச யுத்த சட்டங்களை அடிப்படையாகக் கொண்டு படையினர் மேற்கொண்ட மனிதாபிமான நடவடிக்கைகளை விமர்சனம் செய்திருக்கின்றது. தமக்கு வழங்கப்பட்ட வரையறைகளை மீறி பரிந்துரைகளை வழங்கியிருக்கின்றது. இறுதிக்கட்ட போர் தொடர்பாக சுயாதீன விசாரணைகள் அவசியம் எனவும் படையினர் விசாரணை செய்யப்பட வேண்டும் எனவும் இலங்கையில் இனப்பிரச்சினை இருப்பதாகவும் அதிகாரப் பரவலாக்கலை மேற்கொள்ள வேண்டும் எனவும், பௌத்தத்துக்கு முன்னுரிமை, பெரும்பான்மையினம் சிறுபான்மையினருக்கு உரிமைகளை வழங்குவதில்லை போன்ற விடயங்களை இந்த ஆணைக்குழு தெரிவித்திருக்கின்றது.

எம்மீது சுயாதீனமான விசாரணை நடத்தப்பட வேண்டும் என்ற அழுத்தத்தைக் கொடுக்கும் சர்வதேசத்துக்கு இது மேலும் வசதிகளை ஏற்படுத்திக் கொடுப்பதாக அமைந்திருக்கின்றது. அத்துடன் இந்தப் பரிந்துரைகள் தமிழ் இனவாதிகளுக்கு வாய்ப்பாக அமைந்து விட்டது. எதிர்வரும் மார்ச் மாதத்தில் நடைபெறவிருக்கும் ஐக்கிய நாடுகள் சபை மனித உரிமைகள் ஆணைக்குழுவின் கூட்டத் தொடரில் எம்மை நெருக்கடிக்குள் தள்ளி விடும் சம்பந்தன் மற்றும் புலம் பெயர்ந்த தமிழர்களின் முயற்சிகளுக்கும் சர்வதேசத்துக்கும் இது பெருமளவுக்கு உதவுவதாக அமைந்திருக்கின்றது.

வடபகுதியிலிருந்து இடம் பெயர்ந்த முஸ்லிம்கள் அந்தப் பகுதிகளில் மீளக்குடியேற்றப்பட வேண்டும் என இவ்வாணைக் குழுவின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இருந்த போதிலும் வடபகுதியிலிருந்து இடம்பெயர்ந்த 1,59,000 சிங்களவர்கள் தொடர்பாக இதில் எதுவும் தெரிவிக்கப்படவில்லை.

வெளிநாடுகளிலுள்ள விடுதலைப் பலிகள் தொடர்பாக ஆணைக்





குழுவுக்குப் பரிந்துரைகளை வழங்கியிருந்தோம். ஆனால் அவை தொடர்பாக எந்த விதமான பரிந்துரைகளும் முன் வைக்கப்படவில்லை. தற்போது எம்முன் இருப்பது இறுதிக் கட்டப் போரில் 40,000 பொது மக்கள் கொல்லப்பட்டார்கள் என்ற குற்றச்சாட்டு மட்டுமே. இவை அனைத்தும் பொய்யான குற்றச்சாட்டுக்கள் என்பது ஆதாரங்களுடன் நிரூபிக்கப்பட வேண்டும். எனவே போர் இடம்பெற்ற காலத்தில் வன்னியில் இருந்தவர்களின் குடிசன மதிப்பீட்டைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இதன் மூலமாகவே வெளிநாடு சென்றவர்கள் எத்தனை பேர்? விடுதலைப் புலிகளுடன் இணைந்து செயற்பட்டவர்கள் எத்தனை பேர் என்பதனை அறிந்து கொள்ளக்கூடியதாக இருக்கும். அத்துடன் விடுதலைப் புலிகளுடன் இணைந்து செய்பட்டவர்களுக்கு தண்டனை கொடுக்கப்பட வேண்டும்' எனவும் ஜாதிக ஹெல உறுமயவின் தலைவரும் சிறிலங்காவின் அமைச்சருமான சம்பிக்க ரணவக்க தனது உரையில் மேலும் தெரிவித்துள்ளார்.

தமிழ் மக்களுக்கு அதிகாரப் பகிர்வை வழங்குவதற்கு சிங்கள பௌத்த பேரினவாதக் கட்சியான ஜாதிக ஹெல உறுமய தொடர்ந்து எதிர்ப்புத் தெரிவித்து வருவதும் இக்கட்சி சிறிலங்காவின் ஆளும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி அரசாங்கத்தில் அங்கம் வகிப்பதும் குறிப்பிடத்தக்கது.

இதேவேளை இலங்கையின் இனப் பிரச்சினைக்கான தீர்வுத் திட்டம் குறித்து இந்தியா அறிவிக்கக் கூடாது என ஜே.வி.பி வெளியிட்ட ஊடக அறிக்கையில் தெரிவித்துள்ளது.

இனப் பிரச்சினைக்கான தீர்வுத் திட்டத்தை இந்திய வெளிவிவகார அமைச்சர் இலங்கை மக்களுக்கு அறிவிப்பது எந்தவகையிலும் பொருத்தமானதாக அமையாது என ஜே.வி.பி அரசியல் குழுவினால் வெளியிடப்பட்டுள்ள அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

13ஆவது திருத்தச் சட்டத்திற்கு அப்பாலான அதிகாரப் பகிர்வுத் தீர்வுத் திட்டமொன்றை முன்வைக்க முடியும் என சிறிலங்கா அதிபர் தம்மிடம் உறுதியளித்ததாக இலங்கைக்கு விஜயம் செய்துள்ள இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஸ்ணா ஊடகங்களுக்கு தெரிவித்திருந்தார்.

நாட்டின் முக்கிய பிரச்சினைக்கான தீர்வுத் திட்டத்தை வேறு ஒரு நாட்டு வெளிவிவகார அமைச்சரின் வாயிலாக அறிந்து கொள்வது துரதிஸ்டவசமானது என ஜே.வி.பி தெரிவித்துள்ளது.

தேசிய இனப்பிரச்சினைக்கான தீர்வுத் திட்டம் தொடர்பில் அரசாங்கமோ அல்லது அரசுத் தலைவரோ இதுவரையில் கருத்துக்களை வெளியிடவில்லை. அரசாங்கத்தின் தீர்வுத் திட்டம் என்ன என்பதனை மக்களுக்கு அரசாங்கமே தெரியப்படுத்த வேண்டியது அவசியமானது என ஜே.வி.பி தெரிவித்துள்ளது.

# சுமந்திரன் எம்.பி.யின் சட்ட அணுகு முறையால் வடக்கு கிழக்கு காணி தொடர்பான சுற்றறிக்கை வாபஸ்

வடக்கு கிழக்கு பிரதேசங்களில் உள்ள காணிகளை நிர்வகிப்பதற்காக இராணுவ அதிகாரிகள் கொண்ட குழுக்களை நியமிப்பதற்கு ஏதுவாக வெளியிடப்பட்ட சுற்றறிக்கையை இலங்கை அரசாங்கம் மீளப்பெற்றுக் கொண்டுள்ளது.

இந்த சுற்றறிக்கையை கண்டித்து தமிழ்க் கட்சிகள் ஒன்றிணைந்து உண்ணாவிரதப் போராட்டம் நடத்தியும் நாடாளுமன்றத்தில் வலியுறுத்தியும் அரசாங்கம் எவ்வித நடவடிக்கையும் எடுக்காதிருந்த நிலையிலேயே தாங்கள் உச்ச நீதிமன்றத்தின் கவனத்திற்கு விடயத்தைக் கொண்டு வந்ததாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ.சுமந்திரன் தெரிவித்தார்.

வடக்கு கிழக்கு பிரதேசங்களில் உள்ள காணிகளை மீண்டும் பதிவு செய்யுமாறு உரிமையாளர்களுக்கு உத்தரவிட்டு காலக்கெடுவும் விதித்திருந்த குறித்த சுற்றறிக்கை சட்ட முரணானது என்பதை சட்டமா அதிபரும் காணி அமைச்சும் உச்ச நீதிமன்றத்தில் ஒப்புக் கொண்டுள்ளதாகவும் அவர் தமிழோசையிடம் சுட்டிக்காட்டினார். அரசாங்கம் சுற்றறிக்கையை மீளப் பெற்றுக்கொள்வதாக நீதிமன்றத்தில் தெரிவித்த சட்டமாஅதிபர் புதிய சுற்றறிக்கையொன்றை



வெளியிட இருப்பதாக கூறியுள்ளார். புதிய சுற்றறிக்கை அரசியலமைப்புச் சட்டத்துக்கு உட்பட்டதா என்பதை உறுதிப்படுத்தி விட்டே அதனை வெளியிட வேண்டும் என்றும் நீதிமன்றம் அறிவித்திருப்பதாக சுமந்திரன் கூறினார்.

வடக்கு கிழக்கில் இராணுவத்தின் தலையீட்டுடன் நடந்து வருகின்ற குடியேற்றங்களுக்கு சட்டவடிவம் கொடுக்கவே அரசாங்கம் இந்த சுற்றறிக்கையை பயன்படுத்த முயற்சித்தது என்றும் நாடாளுமன்ற உறுப்பினர் சுமந்திரன் சுட்டிக்காட்டினார்.

தேசிய பாதுகாப்பு மற்றும் விசேட அபிவிருத்தி திட்டங்கள் தவிர ஏனைய நோக்கங்களுக்கு காணிகள் விநியோகிப்பதை தற்காலிகமாக தடை செய்வதான சர்ச்சைக்குரிய காணிச் சுற்று நிருபத்தை வாபஸ் பெறுவதற்கு காணி மற்றும் காணி அபிவிருத்தி அமைச்சு தீர்மானித்துள்ளது.

இது தொடர்பான அறிவித்தலை சட்டமா அதிபரின் பிரதி சொலிஸ்டர் ஜெனரல் திருமதி முருது பெர்ணான்டோ நேற்று வியாழக்கிழமை மேன்முறையீட்டு நீதிமன்றத்தில் அறிவித்தார்.

இந்த சுற்று நிருபமானது வடக்கு கிழக்கு மாகாணங்களுக்கென விசேடமாக விடுக்கப்பட்டுள்ளது. இந்த சுற்றுநிருபம் தேசிய பாதுகாப்பு மற்றும் விசேட அபிவிருத்தி திட்டங்கள் தவிர ஏனைய நோக்கங்களுக்காக காணிகளை விநியோகிப்பதை தற்காலிகமாக தடை செய்திருந்தது.

இந்நிலையில் குறித்த காணிச் சுற்றுநிருபத்தை ரத்து செய்யுமாறு தமிழ் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ.சுமந்திரன் மேல் முறையீட்டு நீதிமன்றில் ஆணைக்கோரும் விண்ணப்பமொன்றை தாக்கல் செய்திருந்தார்.

இந்த மனு விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நிலையில் மன்றில் ஆஜரான சட்டமா அதிபரின் பிரதி சொலிஸ்டர் ஜெனரல் மேற்படி சுற்றுநிருபத்தை வாபஸ் பெறுவதான அறிவித்தலை விடுக்குமாறு காணி மற்றும் காணி அபிவிருத்தி அமைச்சு தனக்கு ஆலோசனை வழங்கியதாக குறிப்பிட்டார். இதனையடுத்து சுமந்திரன் எம்.பி. சார்பில் மன்றில் ஆஜரான சட்டத்தரணி கே.கனகேஸ்வரன் 'மேற்படி சுற்று நிருபம் வாபஸ் பெறப்பட்டுள்ளதால் இந்த சுற்றுநிருபத்துக்கு எதிரான வழக்கினை வாபஸ் பெறுவதா? இல்லையா? என்பது குறித்து மறுபரிசீலனை செய்யப்படும்' என்று கூறினார்.

இதனைத்தொடந்து இந்த வழக்கு தொடர்பான விசாரணையினை எதிர்வரும் மார்ச் மாதம் 22ஆம் திகதிக்கு ஒத்தி வைக்க மேன்முறையீட்டு நீதிமன்றம் உத்தர விட்டது.

இதேவேளை முல்லைத்தீவு முகத்துவாரப் பகுதியைச் சேர்ந்த சுமார் 105 குடும்பங்கள் தமது சொந்த இடங்களில் மீளக் குடியமர அனுமதி மறுக்கப்பட்டுப் புளியமுனைக் கிராமத்தில் தங்க வைக்கப் பட்டுள்ளதாகவும், முகத்துவாரப் பகுதியில் 247 பெரும்பான்மை இன மக்கள் குடியேற்றப்பட்டுள்ளனர் என்றும் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. முல்லைத்தீவு முகத்துவாரப் பகுதியில் பூர்வீகமாக சுமார் 150க்கும் மேற்பட்ட தமிழர் குடும்பங்கள் வாழ்ந்தனர்.

# தமிழரின் அபிலாசைகளை தீர்க்கக்கூடிய தீர்வு அவசியம்
# மகிந்தாவிடம் வலியுறுத்தினார் இந்தியா அமைச்சர் கிருஷ்ணா

தமிழ் மக்களின் அபிலாஷைகளைத் தீர்க்கக்கூடிய வகையில் இனப்பிரச்சினைக்கு ஒரு அரசியல் தீர்வு காணப்படுவது மிகவும் முக்கியம் என இந்தியா சிறிலங்காவுக்கு வலியுறுத்தி உள்ளதாக செய்திகள் வெளியாகியுள்ளன.

உத்தியோகபூர்வ விஜயம் ஒன்றை மேற் கொண்டு கொழும்பு வந்துள்ள இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ். எம்.கிருஷ்ணா சிறிலங்காவின் ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவை கடந்த 17 ஜனவரி 2012 செவ்வாய்கிழமை காலை சந்தித்து விரிவான பேச்சுக்களை நடத்திய போதே இதனை வலியுறுத்தினார்.

செவ்வாய் காலை அலரி மாளிகையில் இடம் பெற்ற இந்தச் சந்திப்பின் போது இரு தரப்பு உறவுகள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கும் சிறிலங்கா அரச பிரதிநிதிகளுக்கும் இடையிலான பேச்சுவார்த்தைகள் மீள் குடியேற்றம் உட்பட பல விடயங்கள் தொடர்பாகவும் இருவரும் ஆராய்ந்ததாக செய்திகள் தெரிவிக்கின்றன.

சுமார் ஒன்றரை மணி நேரத்துக்கு நீடித்த இந்தப் பேச்சுக்களின் போது போரினால் இடம் பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்றம் தொடர்பாக முக்கிய கவனம் செலுத்தப்படடது.

தமிழ் மக்களுடைய அபிலாஷைகளை நிறைவேற்றக் கூடிய வகையிலான அரசியல் தீர்வு ஒன்று 'மிகவும் முக்கியமானது' என இந்திய வெளிவிவகார அமைச்சர் அழுத்தமாக ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவிடம் இந்தச் சந்திப்பின்போது தெரியப்படுத்தினார்.

நான்கு நாள் உத்தியோகபூர்வ விஜயம் ஒன்றை மேற்கொண்டு 16 ஜனவரி 2012 திங்கட்கிழமை மாலை கொழும்பை வந்தடைந்த இந்திய வெளிவிவகார அமைச்சரை அலரி மாளிகையில் நடைபெற்ற பொங்கல் விழா வில் வைத்து ஜனாதிபதி வரவேற்றார். பொதுவான விடயங்கள் தொடர்பில் இரு தரப்பினரும் பேசிக் கொண்ட போதிலும் அரசியல் விடயங்கள் தொடர்பில் விரிவாக ஆராயப்படவில்லை.

சந்திப்பில் ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவுடன் வெளிவிவகார அமைச்சர் பேராசிரியர் ஜி.எல். பீரிசும் கலந்து கொண்டார்.

### 13வது திருத்தத்துக்கும் மேலாகச் செல்வதற்கு ஜனாதிபதி இணக்கம்! - ஊடகவியலாளர் மாநாட்டில் கிருஷ்ணா

இலங்கையின் இனப்பிரச்சினைக்கு அரசியல் தீர்வைக் காண்பதற்காக அரசியலமைப்பின் 13 வது திருத்தச் சட்டத்துக்கும் மேலாகச் செல்வதற்கும் தான் தயாராக இருப்பதாக சிறிலங்காவின் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச தம்மிடம் உறுதியளித்துள்ளதாக இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா செவ்வாய் நண்பகல் ஊடகவியலாளர்களிடம் தெரிவித்துள்ளார்.

'ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவுடன் தமிழ்ர்களின் பிரச்சினைக்கு அரசியல் தீர்வொன்றைக் காண்பது தொடர்பாக நான் காலை உரையாடினேன்.

13வது திருத்தத்துக்கு மேலாகச் செல்வது என்ற தன்னுடைய முன்னைய வாக்குறுதியில் தான் உறுதியாக இருப்பதாக அப்போது அவர் எனக்கு உறுதியளித்தார்' என சிறிலங்காவின் வெளிவிவகார அமைச்சில் இடம் பெற்ற ஊடகவியலாளர் மாநாட்டில் கிருஷ்ணா கூறியுள்ளார். ஊடகவியலாளர்கள் மத்தியில் கருத்து வெளியிட்ட கிருஷ்ணா மேலும் குறிப்பிட்டதாவது:

அரசியலமைப்புக்கான 13வது திருத்தச் சட்டத்தை முழுமையாக நடைமுறைப்படுத்துவதன் அடிப்படையில் அர்த்தபூர்வமான அதிகாரப் பரவலாக்கலை வழங்கி இன நெருக்கடிக்குத் தீர்வொன்றைக் காண்பதற்கான தமதுபற்றுறுதியை பல தடவைகளில் சிறிலங்கா அரசாங்கம் எமக்குத் தெரிவித்திருந்தது.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சுவார்த்தைகளில் இதற்கேற்றவாறான ஆக்கபூர்வமான முன்னேற்றத்தையும் அது விரைவு படுத்தப்படுவதையும் நாம் எதிர்பார்க்கிறோம்.



நாடாளுமன்ற தெரிவுக்குழு மற்றும் சிறிலங்கா அரசாங்கத்திற்கும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கும் இடையில் இடம் பெற்று வரும் பேச்சுவார்த்தையின் மூலம் அரசியல் தீர்வுஎட்டப்படும் என இந்தியா நம்புகின்றது.

பல சிறந்த முன் மொழிவுகளை கொண்டுள்ள உண்மைகளைக் கண்டறிவதற்கான நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கை நடைமுறைப்படுத்தப் பட்டால் அது தேசிய நல்லிணக்கத்திற்கு சிறந்த முன்மாதிரியாகும்.

சிறிலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவுடன் காலை இடம் பெற்ற சந்திப்பின் போது இரு தரப்பு உறவுகள் உள்ளிட்ட பல்வேறு விடயங்கள் குறித்து கலந்துரையாடப்பட்டன.

அதே போன்று சிறிலங்காவின் வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பிரிஸுடனான சந்திப்பின் போது வர்த்தக முதலீட்டு மற்றும் அபிவிருத்தி திட்டங்கள் தொடர்பில் கலந்துரையாடப் பட்டன. இலங்கைக்கும் இந்தியாவிற்கும் இடையிலான இருதரப்பு வர்த்தகம் தற்போது ஐந்து பில்லியன் அமெரிக்க டொலரை அண்மித்துள்ளது. இலங்கையின் முதலீடு மற்றும் சுற்றுல்லா ஆகியவற்றில் இந்தியா முன்னிலையில் செயற்படுகின்றது.

சிறிலங்கா அரசாங்கம் மற்றும் பொதுமக்களின் முன்னுரிமைக்கு அமையவே இந்தியாவின் அபிவிருத்திக்கான உதவி திட்டங்கள் இடம் பெற்று வருகின்றன. இவற்றில் வீடமைப்பு, சுகாதராம், கல்வி மற்றும் போக்குவரத்து ஆகியவற்றிற்கு முன்னுரிமையளிக்கப்பட்டுள்ளது. இதற்கு மேலதிகமான இலங்கை மற்றும் இந்தியா ஆகிய நாடுகளுக்கிடையில் புவியியல் மற்றும் கலாசார ரீதியாக நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. சிறிலங்கா அரசாங்கத்துடன் இந்தியா தொடர்ந்து செயற்பட்டு உதவி உள்ளிட்ட தேவையான அனைத்தையும் விடயங்களையும் வழங்கும்.

இதேவேளை நாளை வட மாகாணத்திற்கான விஜயத்தை மேற்கொள்ளும் போது யாழ்ப்பாணம் மற்றும் கிளிநொச்சி ஆகிய பகுதிகளுக்கு விஜயம் மேற்கொள்ளவுள்ளேன்.

இதன்போது கிளிநொச்சி மாவட்ட வைத்தியசாலைக்கு வைத்திய உபகரணங்கள் கையளித்தல், பாடசாலையொன்றை மீளத் திறத்தல், உள்நாட்டில் இடம் பெயர்ந்த மக்களுக்கு 10,000 துவிச்சக்கர வண்டிகள் கையளித்தல் ஆகிய நிகழ்வுகளில் நான் கலந்து கொள்ளவுள்ளேன்.

இதற்கு மேலதிகமாக உள்நாட்டில் இடம்பெயந்த மக்களுக்காக இந்திய அரசாங்கத்தின் நிதியுதவியில் முதற்கட்டமாக நிர்மாணிக்கப்பட்ட 1,000 வீடுகள் கையளிப்பு நிகழ்விலும் நான் கலந்து கொள்ளவுள்ளேன்' என இந்த ஊடகவியலாளர் மாநாட்டில் இந்திய வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணா தெரிவித்துள்ளார்.

இதனிடையில் இலங்கையின் இனப்பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காணும் வகையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் இடம் பெற்று வரும் பேச்சுவார்த்தைகளை சிறிலங்கா அரசாங்கம் இடைநிறுத்தியுள்ளதாக தெரிய வருகின்றது.

உண்மைகளைக் கண்டறிவதற்கான நல்லிணக்க ஆணைக் குழுவின் அறிக்கையை கடும் விமர்சனத்திற்கு உள்ளாக்கி தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு வெளியிட்ட அறிக்கை கொழும்புக்கு கடும் கோபத்தை ஏற்படுத்தியுள்ளதாகவும் இதனாலேயே தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சுவார்த்தைகளை இடைநிறுத்த சிறிலங்கா அரசாங்கம் முடிவு செய்ததாகவும் இவ்வூடகம் குறிப்பிட்டுள்ளது.

அதேவேளை தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சுவார்தைகளை மீளத் தொடங்குவதில் சிறிலங்கா அரசாங்கத் தரப்பில் இழுபறி நிலை இருப்பதைக் காணக்கூடியதாக இருப்பதாக கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன் தெரிவித்தார்.

# இந்தியாவின் புரிதலும் தமிழர்களின் நம்பிக்கையின்மையும்

- அரவிந்தன் -

இலங்கையின் இனப்பிரச்சினையில் இந்தியாவின் பாத்திரத்தைப் பற்றித் தொடர்ச்சியாகப் பலரும் எழுதியும் பேசியும் வருகின்றனர். இதில் இந்திய அரசுக்கான கோரிக்கைகள், கண்டனங்கள், ஆலோசனைகள், நட்புடன் தெரிவிக்கப்படும் கவனிக்க வேண்டிய விசயங்கள், சுட்டிக் காட்டுதல்கள், குற்றச்சாட்டுகள், வசைகள், ஆதரவுகள் எனப் பல வகைகள் உள்ளன.

இந்தக் கருத்துகளை இலங்கைத் தமிழர்கள் சிங்களத் தரப்பினர், இந்தியர்கள் அதிலும் தமிழகத்தைச் சேர்ந்தோர் பிறத்தியார் எனப்படும் வெளியுலகத்தினர் எனப் பலரும் வெளிப்படுத்தி வருகின்றனர்.

இந்தக் கருத்துகளில் சில முக்கியமானவை. பொருட்படுத்தத் தக்கவை. இந்தியா இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையிலான உறவு, இந்த நாடுகளில் ஏற்படவேண்டிய அமைதி, பாதுகாப்பு, இந்த நாடுகளிலுள்ள சமூகங்களுக்கிடையிலான முரண்பாட்டு நீக்கத்துக்கான வழிவகைகள், அவற்றின் அவசியம் போன்றவற்றை கடந்த கால - சமகால – எதிர்கால அடிப்படைகளில் வைத்து அவர்கள் இந்தக் கருத்துகளை முன் வைத்து வருகின்றனர்.

அதிலும் பல ஆய்வுகள் இந்தப் பிராந்தியத்தின் அமைதியையும் இந்தப் பிராந்திய மக்களின் நலன்களையும் பாதுகாப்பையும் மையப்படுத்தியவை.

பிராந்தியத்திலுள்ள நாடுகளை மையப்படுத்திய ஆய்வுகள் என்பதற்குப் பதிலாக அரசுகளின் நலனை மையப்படுத்தியவை என்பதற்கப்பால் இந்தப் பிராந்தியத்தின் மக்கள் மற்றும் அவர்கள் அடையாளப்படுத்தும் சமூகங்களை மையப்படுத்திய ஆய்வுகளும் கவனங்களும் முக்கியமானவை.

இவ்வாறு தொடர்ச்சியாகவும் பரந்த அளவிலும் வெளிப்படுத்தப்பட்டு வரும் கருத்துகள் தொடர்பாக இந்திய அரசு எத்தகைய அக்கறையைக் கொண்டுள்ளது? அது எத்தகைய புரிதல்களைப் பெற்றிருக்கிறது? அல்லது அது இவை குறித்து அக்கறைப்படவேயில்லையா?

இந்த மாதிரியான கேள்விகள் இன்று பதில் காணப்படவேண்டியவையாக உள்ளன.

ஏனெனில் ஏறக்குறைய அரை நூற்றாண்டுக்கும் மேலான இலங்கையின் இனப்பிரச்சினையில் இந்தியா வகித்த பாத்திரம் தவிர்க்க முடியாத ஒரு நெருக்கடி நிலையை இலங்கைத் தீவிலுள்ள அனைத்துச் சமூகங்களுக்கும் ஏற்படுத்தியுள்ளது.

இனப்பிரச்சினையைத் தீர்ப்பதிலும் சரி இந்தப் பிரச்சினையைத் தனது நலன்களுக்காகப் பயன்படுத்தியதிலும் சரி இந்தியா பெரும் பாத்திரமொன்றைக் கொண்டுள்ளது. இன்னும் அப்படியான ஒரு முக்கியத்துவத்தையே அது கொண்டுமிருக்கிறது.

இதை மேலும் கூறுவதானால் பிராந்தியத்தில் முக்கியமான சக்தி என்ற வகையிலும் இலங்கைச் சமூகங்களுடன் வரலாற்று ரீதியாக இந்தியாவுக்குள்ள பிணைப்புகள் தொடர்பாகவும் இந்தியா இலங்கை விவகாரங்களில் ஒரு தவிர்க்க முடியாத சக்தி என்ற பாத்திரத்தை வகித்து வருகிறது எனலாம்.

அந்த வகையிலே இந்தப் பிரச்சினை தொடர்பாக இந்திய அரசும் இந்தியத் தலைவர்களும் உயர் மட்ட அதிகாரிகளும் இராச தந்திரிகளும் அடிக்கடி கருத்துத் தெரிவித்து வருகின்றனர்.

ஆனால் நடைமுறையில் அவர்கள் தெரிவித்து வருகின்ற கருத்துகளுக்கும் வெளிப்படையான நடவடிக்கைகளுக்கும் முயற்சிகளுக்கும் மாறாகவே நிலைமையும் யதார்த்தமும் உள்ளது.

அதாவது இலங்கையின் இனப்பிரச்சினையைத் தீர்ப்பதில் இந்தியா திட சங்கற்பமான உறுதிப்பாட்டைக் கொண்டுள்ளது என்று இந்தியாவின்



தலைவர்கள் அனைவரும் கட்சி பேதமின்றிக் கால பேதமின்றிச் சொல்லி வந்திருக்கின்றனர் சொல்லி வருகின்றனர்.

ஆனால் அந்தத் திட சங்கற்பத்தின் தாற்பரியம் என்ன? அதன் அளவு என்ன? அது எத்தகையதாக இருக்கிறது? அதன் பெறுமானம் எத்தகையது? அல்லது அது வெறும் வாய்ப்பேச்சு என்ற அளவிற் தான் - சம்பிர-தாய பூர்வமானதாக உள்ளதா?

இலங்கையின் இனப்பிரச்சினையைத் தீர்த்து வைப்பதில் இந்தியா கரிசனை கொண்டுள்ளது என்று இன்னொரு தளத்தில் அறிவிப்புகள் வந்திருக்கின்றன. அப்படியானால் இந்தக் கரிசனையின் உண்மைத் தன்மை எத்தன்மையை உடையது? அல்லது இந்தக் கரிசனையின் வீச்செல்லையும் விசையும் எத்தகையன?

இலங்கை இனப்பிரச்சினையைத் தீர்ப்பதில் இந்தியா தொடர்ச்சியான முயற்சிகளை மேற்கொண்டு வந்திருக்கிறது? இன்னும் அத்தகைய முயற்சிகளை அது முன்னெடுத்து வருகிறது என்று இந்தியத் தலைவர்கள் சொல்லி வருகிறார்கள். இலங்கை வரும் இந்திய இராசதந்திரிகளும் முக்கியஸ்தர்களும் அமைச்சர்களும் இதைத் தான் சொல்கிறார்கள்.

ஏறக்குறைய இப்படி அவர்கள் சொல்வது சம்பிரதாயமானதாகக் கூட இப்பொழுது மாறி விட்டது. தாங்கள் சொல்லும் இந்தக் கூற்றுகளை இலங்கையில் இப்போது யாரும் நம்புவதும் இல்லை. பெரிதாகப் பொருட்படுத்திக் கொள்வதும் இல்லை என்று கூட அவர்கள் யோசிப்பதில்லை.

தொடர்ந்து தங்கள் சம்பிரதாயபூர்வமான அறிவிப்புகளை இயந்திரமொன்றின் செயற்பாட்டைப்போல எந்த உணர்ச்சியுமின்றிச் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள்.

இந்தியாவின் இந்தச் செயலாண்மைக்குள் - (இலங்கையின் இனப்பிரச்சினையைத் தீர்க்க இந்தியா எடுத்துக் கொண்டு திடசங்கற்பம் (உறுதிப்பாடு) கரிசனை, முயற்சிகள், நடவடிக்கைகள் எல்லாவற்றுக்குள்ளும்) தான், இலங்கையில் இனப்பிரச்சினைப் போர் தீவிரமடைந்ததும் அது மூன்று லட்சம் வரையான உயிர்களைக் குடித்ததும் நடந்திருக்கிறது.

அப்படியானால் இந்தியாவின் விசுவாசமான நடவடிக்கைகளும் திடசங்கற்பமும் கரிசனையும் செயற்பெறுமதியும் இந்தியாவின் செல்வாக்கும் இந்த விசயத்தில் எப்படியுள்ளன?

இந்தக் கேள்வியை இங்கே எழுப்ப வேண்டியிருப்பதே மிகவும் வருத்தத்திற்குரிய ஒன்று தான். ஏனெனில் இதையும் விடக் காட்டமான கேள்விகள் இந்தியாவை நோக்கி இந்த விசயத்தில் ஏற்கனவே பலர் எழுப்பியிருக்கிறார்கள். இப்போது மீண்டும் இதை இங்கே கேட்பது எல்லோருக்கும் சலிப்பூட்டலாம். ஆனால் என்ன செய்வது இந்தக் கேள்வி மீண்டும் எழுகிறதே!

இந்திய வெளியுறவு அமைச்சர் கிருஸ்ணா இலங்கைக்கு வரவுள்ளார் என்ற செய்தி கடந்த வாரத்தில் வெளியாகிய போது இலங்கை மற்றும் புலம்பெயர் நாடுகளில் உள்ள பல ஊடகங்களும் இந்தச் செய்தியைக் கேலிப்படுத்தியே பிரசுரித்தன. சில ஊடகங்கள் கேலிச்சித்திரங்களைக் கூட வெளியிட்டிருந்தன. சில ஊடகங்களின் ஆசிரிய தலையங்கள், கிருஸ்ணாவினுடைய விஜயத்தின் மீது நம்பிக்கையற்ற தன்மையையும் இந்தியா தொடர்பான அவநம்பிக்கையையும் வெளிப்படுத்தியிருந்தன.

இந்தியா ஏன் இப்படி நடந்து கொள்கிறது? என்ற கேள்வி பெரும்பாலான தமிழர்களிடம் இன்று தீவிர நிலையில் எழுந்துள்ளது. ஆயிரம் விமர்சனங்களுக்கு அப்பாலும் இந்தியாவின் மீது பெரும்பான்மையான தமிழர்கள் பிடிப்பும் நம்பிக்கையும் கொண்டிருந்தனர் என்பது உண்மையான செய்தி.

தமிழர் தரப்பின் அரசியலாளர்களிற் பலரும் பெரும்பாலான ஆய்வாளர்களும் இலங்கையின் இனப்பிரச்சினையில் இந்தியாவின் பங்கையும் பாத்திரத்தையும் பெரிதாகவே பேசியும் கருதியும் வந்திருக்கின்றனர்.

ஆனால் இவர்களைக் கூட இந்தியா பொருட்படுத்தவில்லை. – அதாவது தன்னை நம்பியவர்களையும் தனக்கு விசுவாசமாக இருப்போரையும்கூட அது கவனத்திற் கொள்ளவில்லை என்று சில விமர்சகர்கள் இந்த நிலை தொடர்பாகக் கூறுகின்றனர்.

இதனால் இந்தியாவை மட்டும் நம்பினாற் போதாது. அதற்கப்பால் மேற்குலகத்தையும் நம்ப வேண்டும். அவர்களுடைய ஆதரவையும் திரட்ட வேணும் என்ற கருதுகோளுக்கு இலங்கைத் தமிழர்களிற் பலரும் இன்று நகர்ந்துள்ளனர். தமிழர் சார்பான அரசியலாளர்களிற் பலரும் கூட இத்தகைய நிலைப்பாட்டைக் கொண்டிருப்பதை அவர்களுடைய அண்மைய கருத்துகள் தெரிவிக்கின்றன.

தமிழர்கள் மேற்குலகத்தை நம்பி, அதை நோக்கி நெருங்கிச் செல்ல இலங்கையோ இந்தியாவை நோக்கி நெருக்கமாகிறது. என்ன தான் இருந்தாலும் இலங்கையும் இந்தியாவும் மிகவும் நெருக்கத்துக்குரிய நாடுகள். எந்தச் சந்தர்ப்பத்திலும் இலங்கைக்கு இந்தியாவே நட்புச் சக்தி என்று அண்மையில் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷவும் (32ம் பக்கம் பார்க்க)

# மகிந்தாவுக்கு வழக்கில் இருந்து விடுபாட்டை வழங்கும் அமெரிக்கா

அமெரிக்க நீதிமன்றில் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷவுக்கு எதிராக புலிகள் சார்பு புலம் பெயர்ந்த தமிழரினால் தாக்கல் செய்யப்பட்ட மனுவிலிருந்து விடுபாட்டு சிறப்புரிமையை ஜனாதிபதிக்கு அமெரிக்கா வழங்குகிறது.

வெளிநாட்டின் பதவியிலிருக்கும் அரச தலைவராக ஜனாதிபதி ராஜபக்ஷ இருப்பதாக கடந்த 13 ஆம் திகதி வெள்ளிக்கிழமை கொலம்பியா மாவட்ட நீதிமன்றத்திற்காக அமெரிக்க மாவட்ட நீதிமன்றத்தில் சிறப்பு விடுபாட்டு சிபார்சு மனுவை அமெரிக்கா தாக்கல் செய்திருக்கிறது.

அமெரிக்க இராஜாங்கத் திணைக்களத்தின் சட்ட ஆலோசகர் ஹரோல்ட் ஹெஸ்க்ஜு கோவின் கடிதத்தை அடுத்து அமெரிக்காவின் உதவி சட்டமா அதிபர் ரொனி வெஸ்ட் நீதிமன்றில் ஆவணத்தை தாக்கல் செய்துள்ளார்.

சட்ட மனு விலிருந்து ஜனாதிபதி ராஜபக்ஷவுக்கு விடுபாட்டை அளிக்குமாறு அமெரிக்க அரசாங்கத்திடம் இலங்கை உத்தியோக பூர்வமாக கோரிக்கை விருத்திருப்பதாக அமெரிக்க இராஜாங்கத்



திணைக் களத்தின் சட்ட ஆலோசகர் நீதித் திணைக் களத்துக்கு அறிவித்திருக்கிறார்.

அமெரிக்காவின் வெளிநாட்டுக் கொள்கை அடிப்படையில் இத்தகைய நடவடிக்கை தொடர்பான அமர்வுகளை நிராகரிப்பதற்கான முக்கியத்துவத்தை அமெரிக்கா அங்கீகரிப்பதாக இராஜாங்கத் திணைக்கள சட்ட ஆலோசகர் உதவி சட்ட மா அதிபருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். பதவியிலிருக்கும் அரசாங்கத் தலைவருக்கு விடுபாட்டை அளிப்பதற்கான முழுமையான அதிகாரத்தை அமெரிக்க அரசின் நிறைவேற்றுக் கிளையான அமெரிக்க நீதிமன்றம் கொண்டிருப்பதாக உதவி சட்டமா அதிபரின் ஆவணம் சுட்டிக் காட்டுகிறது.

வழமையான சர்வதேசச் சட்டம் வெளியுறவுக் கொள்கை அமுலாக்கம் சர்வதேச உறவுகளின் செயற்பாடு ஆகியவற்றின் பரிசீலனைகளின் அடிப்படையில் அமெரிக்க அரசாங்கத்தின் நிறைவேற்றுக் கிளையிடமிருந்து மேற்கொள்ளப்படும் தீர்மானமானது இந்த விடயத்தில் அமெரிக்காவின் நலன்களுடன் தொடர்பு பட்டதால் பதவியிலிருக்கும் போது இந்த வழக்கிலிருந்தும் ஜனாதிபதி ராஜபக்ஷ விடுபாட்டு உரிமையைக் கொண்டிருப்பதை அங்கீகரிக்கின்றது என்று நீதிமன்ற ஆவணங்களில் கூறப்பட்டுள்ளது.

தீர்மானமானது கட்டுப்படுத்தப்படுவதாகவும் நீதித்துறை மீளாய்வுக்கு உட்படவில்லை என்றும் உதவி சட்ட மா அதிபரின் ஆவணத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்த வழக்கை காசிப்பிள்ளை மனோகரனும் ஏனைய இருவரும் தாக்கல் செய்திருந்தனர். மூன்று மனுதாரர்களின் சார்பாக 30 பில்லியன் டொலர் கோரி மனுத் தாக்கல் செய்யப்பட்டிருந்தது. மூன்று சம்பவங்களில் தமது உறவினர்கள் கொல்லப்பட்டிருந்ததாக மனுதாரர்கள் தெரிவித்திருந்தனர்.

# பொங்கல் பொங்கினார் கே.பி. கிரிபத் பரிமாறினார் டக்ளஸ்



விடுதலைப் புலிகளின் முன்னாள் சர்வதேசப் பொறுப்பாளரும் தற்போது அரசின் காவலில் இருப்பவருமான கே.பி என்கிற குமரன் பத்மநாதன் 15 ஜனவரி 2012 அன்று யாழ்ப்பாணத்தில் பொங்கல் விழாவை கொண்டாடினார்.

பருத்தித்துறை, இன்பருட்டியில் உள்ள 'நேர்டோ' அமைப்பின் அலுவலகத்தில் நடைபெற்ற பொங்கல் நிகழ்வில் கலந்து கொண்டு பொங்கிய கே.பி பிற்பகல் ஒரு மணியளவில் போரினால் வாழ்வாதாரத்தை இழந்த மீனவர்களுக்கு படகு வழங்கும் நிகழ்விலும் கலந்து கொண்டார். அங்கு 25 மீனவர்களுக்குப் படகுகள் வழங்கப் பட்டன.

இதேவேளை மகிந்தாவின் அரசில் அமைச்சராக இருக்கும டக்ளஸ் தேவானந்தர் கிரிபத் (பாற்சோறு) பொங்கி தைத்திருநாளை வரவேற்றார்.

தமிழர் பண்பாடுகளை மறந்து சிங்களப் பண்பாடுகளையும் சிங்கள ஆதிக்கத்தினையும் வலுக்கட்டாயமாக திணிக்க முற்படுகின்றார்.

யாழ்.மாவட்ட ஈ.பி.டி.பி தலைமை அலுவலகத்தில் தைத் திருநாள் விழா கொண்டாடப்பட்டுள்ளது.

ஈ.பி.டி.பி உறுப்பினர்கள், ஆதரவாளர்கள் உறவினர்கள் போன்றவர்களைக் கூட்டியே டக்ளஸ் 2012ம் ஆண்டின் தைத் திருநாளை கொண்டாடியுள்ளார்.

அமைச்சர் பொங்கல் பானையில் அரிசியினை இட்டு பாற்சோற்றினைப் பொங்கி அனைவருக்கும் சிங்கள பாரம்பரியத்துடன் பரிமாறியுள்ளார்.

தமிழர்கள் திருநாளாம் தைத் திருநாள் என்பது உலகறிந்த ஒன்று. தமிழர்களுக்கு எல்லாவற்றிற்கும் பாரம்பரிய பண்பாடுகள் இருக்கின்றன.

சர்க்கரை, பசுப்பால் கொண்டு பொங்கலைப் பொங்கி தமது உறவினர்களுக்கும் பகிர்ந்து உண்ணுவதே தமிழர் பண்பாடு.

பாற்சோறு (கிரிபத்) பொங்குவது சிங்களவர்களது பண்பாடு.

அவர்கள் தமது அனைத்துக் கொண்டாட்டங்களிலும் கட்டாயமாக பாற்சோறு (கிரிபத்) கொடுப்பார்கள். அவ்வகையான பண்பாடுகளைத் தமிழர்களுக்குத் திணிக்க முற்படுகிறார் டக்ளஸ். சிங்களப் பண்பாடுகள் தமிழர்க்கு வேண்டாம்.

தமிழினம் தனக்கென ஒரு விடியலைத்தேடும் வேளையில் சிங்கள் தலைவர்களுடனும் சிங்கள ஆதிக்கத்திற்கும் கீழ் இருக்கின்ற அமைச்சர் தமிழன் என்று சொல்லிக் கொண்டு தைத்திருநாளைக் கொண்டாடுவதற்கு தமிழினமே வெட்கப்பட்டுக் கொள்ளும்.

ஒரு கைதிக்கு மானம் மரியாதையாவது இருக்கும். அடிமைக்கு மருந்துக்கும் அது கிடையாது என்பதை மேற்கூறிய சம்பவங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

## வைத்தியரின் விருப்பம் நிறைவேறுமா?

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு உதவி செய்ததாக குற்றம் சுமத்தப்பட்டு அமெரிக்காவில் சிறை தண்டனை அனுபவிக்கும் இலங்கை வைத்தியர் ஒருவர் தன்னை மீண்டும் பணிக்குச் செல்ல அனுமதிக்குமாறு கோரியுள்ளார்.

இலங்கை வைத்தியரான முருகேசு விநாயகமூர்த்தி என்பவர் விடுதலைப்புலிகளுடன் தொடர்பிலிருந்ததாக குற்றம் சுமத்தப்பட்டு கடந்த 2006ம் ஆண்டு தொடக்கம் நான்கரை வருடங்களாக அமெரிக்காவில் சிறை வைக்கப்பட்டுள்ளார்.

இவர் வடக்கு லண்டனில் உள்ள வைத்தியசாலைக்கு பணிக்குச் செல்ல அனுமதி அளிக்கப்பட வேண்டும் என கோரிக்கை விடுத்துள்ளார்.

# எதற்கெடுத்தாலும் புலிப்பூச்சாண்டி

அரசதரப்பிலுள்ள அமைச்சர்கள், பாதுகாப்புத்துறை அதிகாரிகள் எல்லோருமே இப்போது பேசுகின்ற ஒரே விடயம், ஜேவிபியின் ஒரு பிரிவினர் மூன்றாவது கிளர்ச்சிக்கும் விடுதலைப் புலிகள் இரண்டாவது ஆயுதப் போராட்டத்துக்கும் தயாராகின்றனர் என்பதே.

பாதுகாப்புச்செயலர் கோத்தாபய ராஜபக்ச அவ்வப்போது கூறிவந்த இந்த விடயத்தை இப்போது எல்லா அமைச்சர்களும் வெளிப்படுத்தத் தொடங்கியுள்ளனர். முன்னர் ஜேவிபி பலவீனப்படுவதை விரும்பிய அரசாங்கம் இப்போது அதனை விரும்பவில்லை. முன்னதாக ஜேவிபியை உடைப்பதற்காக விமல் வீரவன்சவையும் நந்தன குணதிலகவையும் பயன்படுத்திக் கொண்டது அரசாங்கம். ஆனால் இப்போது ஏற்பட்டுள்ள பிளவு அரசாங்கத்துக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும் ஒன்றாக அமையவில்லை.



முதலாவது தரப்பினர் ஆயுதக் கிளர்ச்சிகளில் அவ்வளவு தொடர்பில்லாதவர்கள். அரசியல் சித்தாந்தம் பேசுபவர்கள். இவர்கள் எப்படியோ முன்னுக்கு வந்து தலைமைப் பதவியைப் பிடித்துக் கொண்டனர். அவர்கள் தான் விமல் வீரவன்ச சோமவன்ச அமரசிங்க போன்றவர்கள். இவர்களுக்கு ஆயுதப் போராட்டத்தில் அனுபவம் மட்டுமன்றி அதில் நம்பிகையும் இல்லை.

இரண்டாவது வகையினர் ஜேவிபியின் ஆயுதக்கிளர்ச்சிகளில் தீவிரமாக இருந்தவர்களும் தீவிரப் போக்குடையவர்களும். பிறேம்குமார் குணரட்ணனம் மற்றும் அவருடன் இணைந்து கொண்டுள்ளவர்களும் இந்த வகையினர். பிறேம்குமார் குணரட்ணம் பல்லேகல இராணுவ முகாம் தாக்குதலில் தொடர்புடையவர் என்று கைது செய்யப்பட்டு தடுப்பில் இருந்தபோது தப்பிச் சென்றவர். புரட்சியின் மூலம் ஆட்சியைப் பிடிக்கலாம் என்ற நம்பிக்கை கொண்ட இவர்கள் தனியே பிரிந்து சென்றிருப்பது தான் அரசுக்குக் கவலை.

அதிலும் இன்னொரு அச்சம் அரசுக்கு உள்ளது.

ஜேவிபியில் இருந்த போதே இந்தத் தரப்பினர் வடக்கில் தீவிரமாக அரசியல் நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தொடங்கி விட்டனர். அவர்களில் உதுல் பிறேமரட்ண போன்றவர்கள் முக்கியமானவர்கள். இவர்களுக்கு ஆதரவாக இருந்த லலித்குமாரும் அவரது நண்பர் குகனும் யாழ்ப்பாணத்தில் காணாமற் போய் இன்னமும் கண்டுபிடிக்கப்படவில்லை. இவர்களை அரச படையினரே கடத்தியதாக குற்றம் சாட்டப்படுகிறது. ஆனால் அதைப் படையினர் மறுத்துள்ளனர்.

ஜேவிபியின் மாற்று அணியினர் வடக்கில் உள்ள புலிகளுடன் கைகோர்த்துக் கொண்டு ஆயுதப் போராட்டத்தில் இறங்கலாம் என்ற அச்சம் அரசுக்கு இருந்து கொண்டிருக்கிறது. அத்துடன் பிறேம்குமார் குணரட்ணம் அணியினருக்கு வெளிநாடுகளில் உள்ள புலிகளின் ஆதரவாளர்களே நிதியுதவி செய்வதாகவும் அரசாங்கம் குற்றம் சாட்டி வருகிறது.

ஆனால் அதனை அவர்கள் மறுத்துள்ளனர். தமக்குப் பின்னால் புலிகள் இருப்பதாக கூறப்படும் குற்றச்சாட்டை மறுத்துள்ள அந்தக் குழுவின் தேசிய அமைப்பாளரான துமிந்த நாகமுவ வரும் காலத்தில் பசில் ராஜபக்ச நிமால் சிறிபால டி சில்வா போன்றவர்களுக்குப் பின்னாலும் புலிகள் இருப்பதாக அரசாங்கம் கூறக் கூடும் என்று கிண்டலடித்துள்ளார்.

இலங்கையில் புலிகள் இயக்கம் வேரோடு பிடுங்கியெறியப்பட்டு விட்ட போதும் அவர்களை வைத்து அரசியல் நடத்துவதை மட்டும் அரசாங்கம் கைவிடவில்லை. எதற்கெடுத்தாலும் புலிகளை வைத்துப் பூச்சாண்டி காட்டுவது அரசாங்கத்தின் வழக்கமாகி விட்டது.

போர் முடிவுக்கு வந்த பின்னர் குறைந்து போயிருந்த இந்தப் பழக்கம் இப்போது மீண்டும் அதிகரிக்கத் தொடங்கி விட்டது. அமைச்சர்கள் எல்லோரும் இப்போது இன்னொரு ஆயுதப்போர் தெற்கிலும் வடக்கிலும் உருவாகலாம் என்பது போல எச்சரிக்கின்றனர்.

ஜேவிபியில் இருந்து பிரிந்து சென்றோராலும் வெளிநாடுகளிலும் வடக்கில் படையினரிடம் சிக்காமல் தப்பியுள்ள புலிகளாலும் ஆபத்து ஏற்படலாம் என்கிறது அரசாங்கம். தொடர்ச்சியாக அரசாங்கம் கூறி வரும் இந்தக் கருத்துகளை முற்று முழுதாக புறமொதுக்கி விட முடியாது. வலுவான புலனாய்வுக் கட்டமைப்பு ஒன்றைக் கொண்டுள்ள அரசாங்கம் இவ்வாறு எச்சரிப்பது ஆழமாக ஆராயப்பட வேண்டியது.

மக்கள் போராட்டக் குழு என்ற பெயரில் செயற்படும் ஜேவிபி மாற்றுக் குழுவினர் மீது சந்தேகப்படும் அரசாங்கம் இது வரையில் அவர்களில் யாரையும் பிடித்து விசாரிக்கவில்லை. தலை மறைவாக உள்ள பிறேம்குமார் குணரட்ணத்தை மட்டுமே அதிகாரபூர்வமற்ற வகையில் தேடிக் கொண்டிருக்கிறது. ஆனால் இவர்கள் ஆயுதப் போராட்டத்துக்குத் திட்டமிடுவதாக அரசாங்கம் கூறுகிறது.

குறிப்பாக அண்மைக்காலமாக பல்கலைக்கழக மாணவர்களின் போராட்டங்கள் தீவிரமடைந்துள்ளன. ஜேவிபியின் நடவடிக்கைகள் பல்கலைக்கழகங்களில் இருந்து தான் தொடங்குவது வழக்கம். எனவே இந்த இரண்டுக்கும் முடிச்சுப் போட்டு ஜேவிபியின் மூன்றாவது கிளர்ச்சி பற்றி கணக்குப் போடுகிறது அரசாங்கம்.

அதேவேளை வெளிநாடுகளில் அண்மையில் புலிகள் சார்ந்த சில நகர்வுகள் அரசுக்கு நெருக்கடி கொடுப்பதாக அமைந்துள்ளது. இந்தநிலையில் தான் புலிகள் இரண்டாவது ஆயுதப் போராட்டம் பற்றிய அரசு அச்சம் வெளியிட்டுள்ளது.

அடுத்தடுத்து தெற்கிலும் வடக்கிலும் ஆயுதப் போராட்டங்கள் முளை கொள்கின்றன என்று அரசாங்கம் எச்சரிக்கிறது. இது உண்மையாகவும் இருக்கலாம். ஏதேனும் தந்திரோபாய நோக்கம் கொண்டதாகவும் இருக்கலாம்.

ஒரு விடயம் மட்டும் அரசுக்குப் புரிந்துள்ளது போலுள்ளது.

அதாவது தெற்கிலும் வடக்கிலும் ஆயுதப்போராட்டங்களை முறியடித்த போதும் அதற்கான அடிப்படைக் காரணங்களை கண்டறிந்து தீர்வு வழங்கவில்லை என்பதே அது. ஒன்றுக்கு இரண்டு ஆயுதப் போராட்டங்களில் பெரும் அழிவுகளுடன் தோல்வியடைந்த போதும் ஜேவிபி சார்ந்த அணியினர் இன்னொரு ஆயுதப் போராட்டத்துக்குத் தயாராகின்றனர் என்றால் அங்கே இருந்த தவறு திருத்திக் கொள்ளப்படவில்லை என்றே அர்த்தம்.

ஆயுதப்போராட்டத்தை அரசாங்கம் பயங்கரவாதச் செயலாக முத்திரை குத்திக் கொண்டாலும் அதற்குள்ள தார்மீக நியாயங்கள் தான் அதற்குக் காரணம் என்பதை ஏற்றேயாக வேண்டும். புலிகள் இயக்கமோ அல்லது ஜேவிபியோ அல்லது வேறேந்த இயக்கமோ ஆட்களைக் கொன்று சொத்துக்களை அழித்து இன்பம் காண வேண்டும் என்று ஆயுதப் போராட்டத்தை நடத்தவில்லை. அப்படி உருவாக்கப்பட்டிருந்தால் புலிகளாலோ ஜேவிபியாலோ பெரியளவில் மக்கள் ஆதரவைப் பெற்றிருக்க முடியாது. இரண்டு ஆயுதப் போராட்டங்களுக்கும் அடிப்படைக் காரணங்கள் இருந்தன.

தமிழர்கள் இன ரீதியாக, மொழி ரீதியாக அடக்கி ஒடுக்கப்பட்டு, அவர்களின் உரிமைகள் பறிக்கப்பட்ட நிலையில் தான் புலிகள் இயக்கம் தோற்றம் பெற்றது. உயர்கல்வித் துறை அமைச்சர் எஸ்.பி.திசநாயக்க கடந்தவாரம் கிழக்குப் பல்கலைக்கழகத்தில் உரையாற்றிய போது இதனை ஏற்றுக் கொண்டிருந்தார்.

அதுபோலவே தெற்கில் ஜேவிபியும் ஆட்சிமுறைச் சீர்கேடுகளாலேயே உருவாக்கம் பெற்றது. ஜேவிபியின் ஆயுதப் போராட்டம் இரண்டுமுறை இரும்புக் கரம் கொண்டு நசுக்கப்பட்டது. ஆனால் புலிகளை அழிக்க அரசாங்கம் 30 ஆண்டு காலம் போரிட வேண்டியிருந்தது.

ஆக இரண்டு முக்கியமான அமைப்புகளின் மூன்று ஆயுதப்போராட்டங்களை அடக்கிய அரசாங்கமாக இலங்கை அரசு விளங்குகிறது. இந்த வகையில் இலங்கை அரசினதும் படைகளினதும் திறனை யாரும் குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது. ஆனால் அழிக்கப்பட்ட இந்த இரண்டு ஆயுதப் போராட்டங்களும் மீண்டும் முளை கொள்வது உண்மையோ இல்லையோ அப்படியானதொரு கருத்தை அரசாங்கம் முன்வைக்கிறது என்றால் இந்த ஆயுதப் போராட்டங்களின் மீது குறையோ தவறோ இல்லை. தவறுகளை தனியே ஆயுதப் போராட்டங்களை நடத்தியவர்கள் மீது சுமத்தி (30ம் பக்கம் பார்க்க)

# கூட்டமைப்புடனான பேச்சுவார்த்தையும் சிங்கள மனப்போக்கும்

இன்றைய சிறிலங்கா அரசியலில் பிரதான பேசு பொருள்களாக இருக்கும் விடயங்களில் ஒன்று தமிழ்தேசியக் கூட்டமைப்புடனான சிறிலங்கா அரசின் பேச்சுவார்த்தை.

இலங்கைத்தீவில் தனி அடையாளங்களுடன் வாழ்ந்த இரு இனங்களில் ஒன்றான தமிழர்களின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்றதால் தமிழ்த்தேசியக் கூட்டமைப்பு இப் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டிருக்கின்றது.

இந்தப் பேச்சுவார்த்தையில் கூட்டமைப்பு முன் வைத்த கோரிக்கைகள் தொடர்பில் சிறிலங்காவின் அரசியல் தலைமைகளிடமிருந்து பல் வேறு வகையான காட்டமான கருத்துக்கள் வந்து கொண்டிருக்கின்றன.

ஜனாதிபதி ராஜபக்ச . தொடக்கம் அவரது அரசியல் சகபாடிகள்வரை தெரிவிக்கும் கருத்துக்கள் வழமையான சிங்களப் பேரினவாத சிந்தனையாகவும் சிங்கள மனோநிலையைக் கையாள்வதற்கான தந்திரோபாயமாகவும் பார்க்கப்பட்டாலும் அது தமிழ்மக்களின் அரசியல் மனப்போக்கிலும் குறிப்பிட்டளவு தாக்கங்களை செலுத்தி விடுமோ? என்ற கேள்வி எழுவது தவிர்க்க முடியாத ஒன்றாக இருக்கின்றது.

ஏனெனில் சிறிலங்கா அரசு தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் நடாத்தும் பேச்சுவார்த்தையில் கூட்டமைப்பு முன் வைக்கும் காணி, காவல்துறை அதிகாரங்கள் மற்றும் வடக்கு கிழக்கு இணைப்பு போன்றன தொடர்பில் கருத்து தெரிவித்த ஜனாதிபதி ராஜபக்ச அவர்கள் புலிகளால் முன்வைக்கப்பட்ட கோரிக்கைகளையே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும் முன்வைக்கின்றது எனவும் காவல்துறை அதிகாரம் மாகாணசபைக்கு வழங்கப்பட்டால் தன்னை கைது செய்யும் அதிகாரம் தமிழ்மக்களுக்குக் கிடைத்து விடும் எனவும் தெரிவித்துள்ளார்.

நிறைவேற்று அதிகாரம் கொண்ட பாதுகாப்பு அமைச்சையும் தன்னிடம் வைத்திருக்கும் ஜனாதிபதியின் இத்தகைய மிகைப்படுத்தல்களில் இருந்து ராஜபக்சவின் அரசியல் உள்நோக்கைப் புரிந்து கொள்ளலாம்.

மேலும் இவ்வாறு தெரிவிப்பதன் மூலம் கூட்டமைப்பின் கோரிக்கைக்கு எதிரான சிங்களப் பேரினவாத மனப்போக்கைக் கிளறி சிங்கள மக்களின் நலன்களுக்காக விட்டுக் கொடுப்பின்றிச் செயற்படுவதாக காட்ட முனைகின்றார்.

இது சிங்களப் பேரினவாத அரசியல் தலைமைகளின் வழமையான தந்திரோபாயம். மறுவளமாக கூட்டமைப்பு புலிகளைப்போல தமிழ்மக்களின் அரசியல் அபிலாசைகளை நிலைநிறுத்திப் பேசுகின்றது என்ற ஒரு நம்பிக்கையான கருத்தியலையும் தமிழ்மக்கள் மனங்களில் விதைத்துவிடப் போகின்றதா? என்ற ஐயம் எழாமலுமில்லை.

தமிழ்த் தேசியக்கூட்டமைப்பின் கருத்துப்படி வடக்கு கிழக்கு இணைப்பு, காணி, காவல்துறை அதிகாரங்களை உள்ளடக்கிய அரசியல் தீர்வு பற்றிப் பேசுவதாகக் கூறி வருகின்றது. ஆனால் அதன் உள்ளார்ந்தமாக நோக்கினால் இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் சிறிலங்கா அரசால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட 13வது அரசியல் திருத்தச்சட்டத்தில் மாகாணங்களுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களை மீளக் கோரும் பேச்சுவார்த்தையாகவும் கருத முடியும்.

கூட்டமைப்பானது சிறிலங்கா அரசுடனான பேச்சுவார்த்தை ஏமாற்றுத்தன்மை வாய்ந்தது. எனவே பேச்சுவார்த்தையில் உறுதிமொழிகள் தராவிட்டால் பேச்சுவார்த்தைகளைத் தொடர மாட்டோம் என்பதும் பின்னர் தனது கூற்றை மறுதலித்து விட்டு பேச்சுவார்த்தையில் கலந்து கொள்வதுமான சூழ்நிலை அரசியல் நகர்வுப்போக்கைக் கடைப் பிடிக்கின்றது.

உயர்வான அரசியல் விடுதலைக்காகப் போராடிய இனத்தின் விடுதலை உளவியலின் வீச்சைக்குறைக்க 'உள் இணக்க வெளி முரண்பாடு' என்ற நீண்ட கால அரசியல் உத்தி இங்கு கையாளப்படுகின்றதா? இப்படியே தொடர்வதனூடாக 'சரி இனி என்ன செய்வது இதாவது கிடைத்ததே பெரிய விடயம்' என்ற மனநிலையை நோக்கி தமிழ்மக்களை கொண்டு செல்லும் நோக்கம் இதனுள் மறைந்திருக்கின்றதா?

குறிப்பாக இந்தப் பேச்சுவார்த்தைகளின் பின்னணியில் இந்தியாவும் மேற்குலகமும் உள்ளது என்றும் கூட்டமைப்பு இந்தியாவின் பின்புலத்தில் செயற்படுகின்றது என்றும் சந்தேகங்கள் முன் வைக்கப்படுகின்றன. மறுவளம் சர்வதேச அழுத்தங்களில் இருந்து தப்பிக் கொள்ள தமிழ்மக்களிற்கு ஏதாவது ஒரு தீர்வு வழங்கவேண்டிய நிரப்பந்தத்தில் சிறிலங்கா இருக்கின்றது. எனவே இவற்றின் ஒன்றிணைந்த போக்காக இருக்குமோ என்ற சந்தேகம் எழுகின்றது.

இப்படியே கூட்டமைப்பின் அதிகாரக் கோரிக்கைகளும் அது தொடர்பான முரண்பாடுகளும் பேசு பொருளாகத் தொடர்ந்தால் தமிழ்மக்களின் அரசியல் அடிப்படைகளான தாயகம், தேசியம், சுயநிர்ணயம் என்ற கருத்தியல் தளத்திலிருந்து பலவீனப்பட்டு அதிகாரங்களைப் பெற்றுக் கொள்வதே பாரிய அரசியல் அடைவாக நினைக்குமளவிற்கு தமிழ் மக்களின் உளவியலை நகர்த்திக்கொண்டு சென்று அரசியல் அபிலாசைகளின் சிந்தனைக்கனதியைக் குறைத்து ஒரு குறைந்தபட்ச அதிகாரம் கொண்ட தீர்வைக் கொடுக்கும் கபடநோக்கம் மறைந்துள்ளதா என்பதை தமிழ்மக்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். இதனால் கூட்டமைப்புடனான பேச்சுவார்த்தையை கவனமாக உற்று நோக்க வேண்டும்.

**அரசியல் விடுதலையின் கருத்தியல்சார் போக்குகள்**

இந்த இடத்தில் கூட்டமைப்பைப் பற்றிய வாதப்பிரதிவாதங்களுக்கு அப்பால் தமிழ்மக்கள் ஏன் ஒரு தெளிவான பாதையில் சரியான நிலைப்பாட்டில் பயணிக்க முடியவில்லை என்ற கேள்வி எழுவது தவிர்க்க முடியாதது.

நாம் யூத இனத்தின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எமது போராட்டத்தை முன்னெடுக்க வேண்டும் என கருதினாலும் யூத இனத்தின் அடிப்படைப் பண்பியல்புகள் எம்மிடம் இருக்கின்றதா? அப்படியாயின் அதை வளர்த்துக் கொள்ள முனைகின்றோமா? என்றால், ஆம் என்று உறுதியாக கூறமுடியாது.

யூதர்கள் விடுதலைக்கான அடிப்படைகளான சமூக, பொருளாதார, அரசியல் தளத்தை புலம்பெயர் தேசத்தில் கட்டியெழுப்பி மக்களை ஒருங்கிணைத்து, கொஞ்சம் கொஞ்சமாக தளத்தை உருவாக்கி உழைத்தார்கள். தெளிவான பாதையை, பல்வேறு தளங்களில், திசைகளில் வகுத்தார்கள். தனித்தனியாக இலக்கைநோக்கிப் பயணித்தார்கள். தன்னம்பிக்கையும் திடமும் இருந்தது. உறுதியாக நம்பி அதை முன்நகர்த்தி வெற்றி பெற்றார்கள். யூதர்களின் போராட்டத்திற்கான சர்வதேச, புவியியல் நிலைமைகள் வேறுவகையில் இருந்தன. ஈழத்தமிழர்களுக்கு அப்படியில்லை என்ற விவாதத்தை விடுத்து இருக்கும் சூழலையும், தேவைப்படுமிடத்து உருவாக்க வேண்டிய சூழல்களையும் நாமே உருவாக்க உழைக்க வேண்டும்.



மாறாக வாய்ப்பான சூழல் வருமென்று காத்திருக்கலாம் என்பது 'இலவு காத்த கிளி மாதிரி' போய் விடும். சிங்களத்தின் அரசியல் நகர்வுகளை எதிர்கொள்ளும் தமிழ் மக்களின் அரசியல் விடுதலைப் போராட்டத்தை முன்நகர்த்தும் தலைமைகளிடம் மற்றும் அரசியல் பற்றி பேசுபவர்களிடம் இருக்கும் மனப் போக்கின் தன்மையே தற்போதைய மீள் எழுகையின் தடைக்காரணிகளாக இருக்கின்றன. எவ்வகையான மனப்போக்கு, குறிப்பாக முள்ளிவாய்க்காலுக்குப் பின்னர் எப்படியிருக்கின்றது என நோக்குவோமாயின்

• இணக்கநிலை மனப்பாங்கில் தமிழ் மக்களின் இனவிடுதலை பற்றிய சிங்களத்தின் சிந்தனையை தத்துவார்த்தமாக மறுவாசிப்பு செய்யும் மனப்போக்கு.

•ஒரு முனைப்படாமல் உள்முரண்பாடுகளில் அதிகமான வலுவையும் வளத்தையும் செலவழிக்கும் மனப்போக்கு.

• தோல்வி மனப்பான்மையில் சரணாகதிஅடைந்து சிங்களத்துடன் இணைத்து போய் தருவதை வாங்குவோம் என்ற கருத்தியல் அடித்தளத்தில் செயற்படும் மனப்போக்கு.

•தமிழ்மக்களின் அரசியல் அபிலாசையைத் தெளிவாகக் கொண்டிருந்தாலும் தெளிவான பரந்தளவிலான செயற்பாடுகளை முன்னெடுக்கக்கூடிய மூலோபாயங்களை கொண்டிராத தன்மையும் ஒற்றுமையின்மையும் கொண்ட மனப்போக்கு.

• புலி எதிர்ப்பு என்ற ஒரே மனநிலையில் தமிழ்த்தேசிய விடுதலைக்கான போராட்டத்தையும் அரசியல் முன்னெடுப்புகளையும் 'குதர்க்கம்' பண்ணும் மனப்போக்கு.

• விடுதலை நிகழ்வுகளும் சிறு சிறு அடைவுகளும் உணர்வு கருத்தியல் ரீதியாக மக்களை ஒன்றாக்கி வைத்திருக்க மிக அவசியமானவை. ஆனால் அதை மட்டுமே பாரிய அரசியல் அடைவுகளாகக்கருதி திருப்தியடையும் மனப்போக்கு.

இவ்வாறான உளவியல்சார் நடத்தைகளே தொடர்ந்தும் வேகமாக நகர முடியாத நிலையை மக்கள் மத்தியில் வைத்திருக்கின்றன.

சிங்களத்துடன் இருப்பவர்களையும் அவனது கொள்கைக்குச் சார்பாகத் தனது வாழ்வரசியலை நடாத்துகின்றவர்களையும் சிங்களத்துடன் சேர்த்தே கையாளலாம். ஆனால் ஈழத்தமிழ் மக்களுடன் இருந்து கொண்டு தம்மை அரசியல் மேதாவிகள் போல நினைத்து இணக்கநிலை அல்லது சரணாகதி அரசியல் மனநிலையில் நின்று செயற்படுபவர்கள் நம்புகின்றவர்களின் கருத்துக்கள் சாணக்கியமாகவும் புலமை சார்ந்ததாகவும் இருக்கலாம். ஆனால் அவர்களின் கருத்துக்கள் மெல்ல மெல்ல நஞ்சூட்டுவது போன்று விடுதலைக்கு வீச்சுக் கொடுக்காது பலவீனப்படுத்திக் கொண்டிருக்கும். வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவதைப் போல ஈழத்தமிழர்களின் அரசியல் முனைப்புகளைச் சிதைத்துவிடும்.

இப்படியான பல முரண்பாடுகளின் விளைவு சிங்களத்தின் தந்திரோபாய வெற்றிக்கு வழியமைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கின்றது. விடுதலைக்கான செயற்பாடுகளில் ஒவ்வொருவருக்கும் அவர்களின் ஆளுமையின் அடிப்படையில் ஒவ்வொரு செயற்பாடு உண்டு. அவை பல்வேறு தளங்களில் திசைகளில் முன்னெடுக்கப்பட வேண்டும். அதைத் தெளிவாக முன்னெடுக்க வேண்டும். அப்போது தான் அர்த்தமற்ற முரண்பாடுகள் களையப்பட்டு தெளிவான இலக்கை நோக்கி நகர முடியும். சிங்கள மூலோபாயங்களைத் தந்திரமாக வெல்வதற்கான வழிகள் எமது செயற்பாட்டின் விரிவாக்கத்தில் தான் மறைந்திருக்கின்றன.

மாற்றமடையாத சிங்களத்தின் மனப்பாங்கை வெற்றி கொள்ளக்கூடிய வகையில் தமிழ்மக்களின் மனப்பாங்கு மேம்படுத்தப்பட வேண்டும், ஒழுங்குபடுத்தப்பட வேண்டும், குழப்பத்துடன் நம்பிக்கையற்றிருப்போருக்கு தமிழ் மக்களின் அடிப்படைப் பண்பியல் ஒளியைப் பாய்ச்சி, புதுப்பித்து சரியான திசையில் கொண்டு செல்ல வேண்டும். இதுவே தோல்வி, சரணாகதி மனநிலையில் இருந்தும் குதர்க்கவாத மனநிலையில் இருந்தும் விடுபட்டு எதிர்நீச்சல் போடக்கூடிய மனவலிமையுடன் நகர்வதற்குரிய ஆற்றலையும் புத்துணர்ச்சியையும் கொடுக்கும்.

எனது கட்டுரை ஒன்றுக்கான பின்னூட்டத்தில் 'நாங்கள் யூதர்களைப் போல இல்லாவிட்டாலும் பரவாயில்லை குறைந்தது சிங்களவர்கள் போல ஒற்றுமையாக இருந்தாலே அரசியல் விடுதலை சாத்தியம்' எனத் தெரிவிக்கப்பட்டிருந்தது தான் நினைவிற்கு வருகின்றது. ஏனெனில் சிங்கள அரசியல் தலைமைகள் அரசியலில் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டிருந்தாலும் சிங்களத் தேசியவாதம் அல்லது தமிழ்த் தேசியத்திற்கான எதிர்ப்பு என்று வரும்போது ஒன்றாகக் கைகோர்ப்பார்கள். சரி பிழை என்ற உள்விவாதங்களுக்கு அப்பால் சிங்களத் தேசியவாதச் சிந்தனையில் ஒன்றாக உறுதியாக நிற்பார்கள். சுயவிமர்சனம் தேவை என்ற பெயரில் இனத்தை சிறுமைப் படுத்தும் அரசியல் முயற்சிகளைச் சீரழிக்கும் செயற்பாடுகளைச் செய்ய மாட்டார்கள்.

எனவே தமிழ்மக்களின் அரசியல் மனோபலத்தின் நிடத்தன்மையை மழுங்கடிக்கும் செயற்பாடுகளைச் செய்யாமல் முடிந்தவரை (15ம் பக்கம் பார்க்க)

# அப்துல் கலாமும் யாழ்ப்பாணமும்

மறவன்புலவு சச்சிதானந்தன்

அப்துல் கலாம் 2012 தைப் பொங்கலுக்குப் பின்னர் யாழ்ப்பாணம் வருகிறார் என்றறிந்தேன். அவருடைய ஆங்கில ஆசிரியர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த கனகசுந்தரம். இதை அவரே தன் நூல் ஒன்றில் குறிப்பிடுகிறார்.

தில்லித் தமிழ்ச் சங்க விழாவில் என்னிடம் பேசுகையில் மிக்க மகிழ்ச்சியுடன் தன் ஆங்கில ஆசிரியர் கனகசுந்தரனாரை நினைவு கூர்ந்தார்.

1959 தொடக்கம் பல முறை இராமேச்சரம் போயிருக்கிறேன். அண்மையில் 2009இல் ஒரு முறை இராமேச்சரம் சென்ற பொழுது அப்துல் கலாம் பிறந்த வாழ்ந்த இல்லம் சென்றேன். அவரது அண்ணரைச் சந்தித்தேன். அப்துல் கலாமைப் போலவே அவரது அண்ணரும் பேசுவது குறைவு.

அப்துல் கலாமின் ஆங்கில ஆசிரியர் கனகசுந்தரம் பற்றிக் கேட்டேன். அவரோ அவரது குடும்பத்தினரோ இராமேச்சரத்தில் வாழ்கிறார்களா என உசாவினேன்.

அப்துல் கலாமுடன் கூடப் படித்த சிவாசாரியார் ஒருவரிடம் கேட்குமாறு என்னை அனுப்பினார். முதியவரான அச் சிவாசாரியாருக்குப் பழைய நினைவுகளை மீட்க முடியவில்லை.

அப்துல் கலாம் படித்த பள்ளிக்குச் சென்றேன். தலைமை ஆசிரியர் ஒரு பெண். இராமநாதபுரம் மாவட்டத்தின் வேறொரு ஊரைச் சேர்ந்தவர். மாற்றலாகி இந்தப் பள்ளிக்கு வந்திருந்தார். அவருக்கோ ஆசிரியர்களுக்கோ பழைய பதிவுகள் எதுவும் கிடைக்கவில்லை எனக் கூறினர்.

தலைமை ஆசிரியருக்கு என்னைத் தெரிந்திருக்கிறது. சேதுக் கால்வாயத் திட்டத்தை ஆதரித்துப் பரப்புரை செய்து வந்த என்னைத் தொலைக் காட்சியில் பார்த்திருக்கிறார். மேல் வகுப்பு மாணவருக்குச் சேதுக் கால்வாய்த் திட்டத்தை விளக்குமாறும் மறுநாள் காலை வருமாறும் கேட்டார். அடுத்த நாள் காலை அப்பள்ளிக்கு மீண்டும் சென்றேன். சேதுக் கால்வாய்த் திட்டத்தின் நன்மைகளை மேல்வகுப்பு மாணவர்களிடையே எடுத்துக் கூறினேன்.

அந்தப் பள்ளி அப்துல் கலாம் படித்த பள்ளி என்பதால் புகழ் பெற்றிருந்தது. பல அமைப்புகள் அப்பள்ளிக்குக் கல்வித் துணைக் கருவிகளை, ஆய்வகக் கருவிகளை வழங்கியிருந்தன. அவற்றைப் பயன்படுத்த முறையான ஆசிரியர்களைப் பள்ளிக் கல்வித் துறை அனுப்பாததால் அவை ஓர் அறையில் பாதுகாப்பாக இருந்தைதக் தலைமை ஆசிரியர் எனக்குக் காட்டி வருந்தினார்.



இணுவிலைச் சேர்ந்த ஒரு பெண். சிவாசாரியார் பரம்பரை. கலை ஆர்வத்தால் சென்னை வந்து திரைப்படங்களில் நடித்தவர். கவர்ச்சி நடிகையாக அக்காலத்தில் புகழ் பெற்றவர்.

தன் இறுதிக் காலத்தில் இராமேச்சரம் வந்தார். யாழ்ப்பாணத்தாரின் திருமடத்தைப் பரிபாலித்த சிவாசாரியார் ஒருவரின் இரண்டாம் தாரமானார். இறுதி வரை இரமேச்சரத்திலேயே வாழ்ந்து இறந்துவிட்டார். கணவரும் இறந்து விட்டார். இருவருக்கும் மக்கட்பேறில்லை.

அச்சிவாசாரியாரின் முதல் மனைவியின் மகன் இப்பொழுதும் அந்த வீட்டில் இருக்கிறார். அவரிடம் சென்று, இராமேச்சரத்தில் வாழ்ந்த வாழ்கின்ற யாழ்ப்பாணத்தார் பற்றிய செய்தியைக் கேட்டேன்.

கிழக்குக் கோபுர வாயிலுக்குத் வடக்கே உள்ள வீடுகளில் யாழ்ப்பாணத்துப் பரம்பரையினர் வாழ்வைதக் கூறி அடையாளமும் தந்தார்.

அதுமட்டுமன்று தன் தந்தையார் பராமரித்த யாழ்ப்பாணத்தார் திருமடத்தை அரசு கையகப்படுத்திய செய்தியையும் சொன்னார். அரசின் முடிவுக்கு எதிராகத் தன் தந்தையார் வழக்குத் தொடுத்தும் தோல்வி கண்டதால் அந்தத் திருமடத்தில் கோயில் அலுவலர்கள் தங்குவதாகவும் கூறினார். பொன்னம்பலம் இராமநாதன் அந்தத் திருமடத்தைத் திருத்தி தன் தந்தையாரின் மேற்பார்வையில் விட்டதாகவும் அடாத்தாக அரசு கையகப்படுத்தியதாகவும் தெரிவித்தார்.

வடக்கு வீதியில் மாடி கொண்ட உறுதியான ஆனால் பராமரிப்பற்ற கட்டடமாக இன்றும் யாழ்ப்பாணத்தார் திருமடம் என்ற பெயரில் உள்ள அந்தக் கட்டடம், கோயில் அலுவலரின் குடியிருப்பாக உள்ளது.

கோயிலின் கிழக்கு வாயிலை ஒட்டி வடக்கே செல்லும் சந்து ஒன்றில் கனகசுந்தரம் குடும்பமோ யாழ்ப்பாணத்தாரோ இருக்கலாம் என்ற என் தேடல் வீண் போகவில்லை. இராமேச்சரத்தில் பல தலைமுறைகளாக வாழ்ந்து வரும் சில யாழ்ப்பாணத்தார் குடும்பங்களை அங்கு சந்தித்தேன். அவர்கள் எவருக்கும் கனகசுந்தரம் பற்றித் தெரியவில்லை. ஏனெனில் அவர்கள் யாவரும் இளைய தலைமுறையினர். கனகசுந்தரம் திருமணமாகாதவராக இருக்கலாம் என்ற செய்தியை அங்கிருந்த ஒரு முதியவர் கூறினார்.

இராமேச்சரம் கோயில் ஆட்சியரிடம் சென்றேன். இராமேச்சரத்தில் யாழ்ப்பாணத் திருமடம், கோயிலுக்கு யாழ்ப்பாணத்தார் அமைத்த பூசை அறநிலைகள் பற்றி விசாரித்தேன்.

எந்தத் தகவலும் அவர்களால் தாமுடியவில்லை. ஆனாலும் யாழ்ப்பாணத்தில் இராமேச்சரம் கோயிலுக்கு உள்ள சொத்துகளின் பட்டியலையும் அவற்றில் இருந்து வருவாய் எதையும் பெறுவதில்லை என்ற தகவலையும் ஏடுகளில் பார்த்துத் தந்தார்.

யாழ் நகரில் சிவன் கோயிலுக்கும் கதிரேசன் கோயிலுக்கும்

(30ம் பக்கம் பார்க்க)

# பாராளுமன்றத்தையும் ஆக்கிரமித்த WHY THIS கொலை வெறி பாடல்

நடிகர் தனுஷின் றூால வுாளை கொலை வெறி பாடலினால் பாராளுமன்றத்தில் புதன்கிழமை நடைபெற்ற விவாதம் சுவாரஷ்யமாக இருந்ததுடன் சபையில் இருந்த இருதரப்பினரும் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரித்தனர்.

பாராளுமன்றத்தில் நேற்று புதன்கிழமை ஊழியர் சகாயநிதியம் திருத்தச் சட்ட மூலம் மீதான விவாதத்தில் கலந்து கொண்டு உரையாற்றிய ஆளும் கட்சியின் எம்.பி.யான அஸ்வர் ஜே.வி.பி.யை பார்த்து Why This கொலை வெறி எனக் கேட்க எமக்கு No கொலை வெறி என ஜே.வி.பி. எம்.பி. தெரிவித்த வேளையிலேயே சபையில் சிரிப்பொலி எழுந்தது.

ஆளும்கட்சியின் எம்.பி.யான அஸ்வர் தனதுரையில் தமிழ்நாட்டு காரர்களுக்கு கொலை வெறி பிடித்துள்ளது. அதனால் தான் அவர்கள் இன்று கொலை வெறி கொலை வெறி என பாடல்களில் கூட பாடுகின்றனர். இந்தக் கொலை வெறி பாடலுக்கு எமது யாழ்ப்பாண இளைஞன் பதிலடி கொடுத்து பாடியுள்ளார். அந்தப் பாடலை தமிழக முதல்வர் ஜெயலலிதாவுக்கும் கருணாநிதிக்கும் அனுப்பி வைக்க வேண்டும்.

இங்கோ! ஜே.வி.பி.யினர் கொலை வெறியுடன் திரிகின்றனர். கொலை வெறியுடன் யாழ்ப்பாணம் சென்று அடி வாங்கிக் கொண்டு திரும்பி வந்துள்ளனர். சுனில் ஹந்து நெத்தி எம்.பி.யே Why This கொலை வெறி என அஸ்வர் எம்.பி. கேட்கையில் No கொலை வெறி No கொலை வெறி என சுனில் எம்.பி. தெரிவித்தார். இதன் போது அவையில் இருந்தவர்கள் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரித்தனர். இதனால் விவாதம் சுவாரஷ்யமாக இருந்தது.

விவாதத்தை தனதுரையில், சுவாரஷ்யப் படுத்திய அஸ்வர் எம்.பி. ஜே.வி.பி.யை பார்த்து தனதுரையில் றூால வுாளை கொலை வெறி Why This கொலை வெறி எனக் கேட்க பதிலுக்கு ஜே.வி.பி.யினர் ஆளும் தரப்பை பார்த்து Why This கொலை வெறி Why This கொலை வெறி எமக்கு ழே கொலை வெறி எமக்கு ழே கொலை வெறி எனக் கூறிக் கொண்டிருந்தனர்.

இதனிடையே அஸ்வர் எம்.பி.யை அடுத்து உரையாற்றிய யோகராஜன் எம்.பி. Why This கொலை வெறி பாடலை சரியாக புரிந்து கொள்ளாத அஸ்வர் எம்.பி. தவறான அர்த்தத்தை கற்பித்து கொலை வெறியை தூண்டும் வகையில் அர்த்தம் கற்பிக்கின்றார் என சுட்டிக்காட்டினார்.

Why This கொலை வெறி எனும் பாடலுக்கு நல்ல பல்வேறு அர்த்தங்கள் இருக்கின்றன. எனினும் அஸ்வர் எம்.பி. தமிழகத்தவர்களுக்கு உள்ள கொலை வெறியில் தான் இந்தப் பாடல் பாடப்பட்டதாக கூறுகின்றார். இது தவறானது.

இந்நிலையில் அவைக்கு தலைமை தாங்கிக் கொண்டிருந்த அஸ்வர் எம்.பி. குறுக்கிட்டு இல்லை, இல்லை அது சரியான அர்த்தமாகும். எம்மீது உள்ள கொலை வெறியில்தான் எம்மை பார்த்து இந்தப் பாடலை பாடியுள்ளனர் என்றார்.

இதனை மறுத்த யோகராஜன் எம்.பி. இல்லை. இந்தப்பாடலுக்கு நீங்கள் தான் தவறான அர்த்தத்தை கொடுக்க முற்படுகின்றீர்கள். அந்தப்பாடலோ வேறு அர்த்தத்திலேயே பாடப்பட்டுள்ளது.

தமிழகத்தவர்களுக்குள்ள கொலை வெறியில் தான் இந்தப் பாடல் பாடப்பட்டதாக நீங்கள் தான் கூறிக் கொண்டுஇங்குள்ளவர்களுக்கு கொலை வெறியை தூண்டுவதற்கு முற்படுகின்றீர்கள்.

இது தவறானது என்பதனால் தயவு செய்து Why This கொலை வெறி எனும் பாடலுக்கு தவறான அர்த்தத்தை கற்பிக்க வேண்டாம் என்றார் யோகராஜன் எம்.பி.

# கூட்டமைப்புடனான பேச்சுவார்த்தையும் சிங்கள மனப்போக்கும்

(12ம் பக்கத் தொடர்ச்சி) உண்மையான நேர்மையான அரசியல் செயற்பாடுகளை முன்னெடுக்க வேண்டும். உண்மையான அரசியல் என்பதன் விளக்கம் உன்னதமான தியாகங்களின் உண்மைத் தன்மையையும் அவர்களின் சிந்தனைகளையும், விடுதலைப் போராட்டத்தின் அரசியல் வரலாற்றையும் மழுங்கடிக்காத அவற்றை வலுப்படுத்தக்கூடியதாக இருப்பது அவசியமானது.

இறுதியாக கொள்கையளவில் தமிழ் மக்களின் அடிப்படை அரசியல் உரிமைகளைப் பற்றி பேசினாலும் தற்போது கூட்டமைப்பு பங்கு கொள்ளும் பேச்சுவார்த்தை, அரசியல் அடிப்படைகளை நிலை நிறுத்துவதற்கான பேச்சுவார்த்தையாகக் கருத இயலாது. மாறாக இந்திய-இலங்கை உடன்படிக்கைக்கு அமைவாக சிறிலங்காப் பாராளுமன்றத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட தமிழர்களுக்கான அதிகாரங்களை வழங்குமாறு கோரும் பேச்சுவார்த்தை என்றே கருதவேண்டும். எனவே இந்த பேச்சுவார்த்தையைப் பெரிதுபடுத்தித் தமிழ்மக்களுக்குத் திருப்தியைக் கொடுக்க முடியாது. வேண்டுமானால் சிறிலங்காப் பாராளுமன்றத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அரசியல் திருத்தச் சட்டத்தைக் கூட சிறிலங்கா அரசு வழங்குவது தொடர்பில் எவ்வாறு செயற்படுகின்றது என்பதனூடாக தமிழ் மக்கள் தமது சிங்களத்தின் மீதான நம்பிக்கையற்ற போக்கின் அடிப்படைக் காரணத்தை மீண்டும் ஒருமுறை புரியவைப்பதற்காகப் பயன்படலாம்.

தமிழ்மக்களின் அரசியல் அபிலாசைகளை உள்ளடக்கிய அரசியல் தீர்வை சிங்களத் தலைமைகள் இலகுவாகத் தந்து விடப்போவதில்லை. எனவே, இழுத்தடிப்புக்களின் மூலம் எமது தாயகக் கோட்பாட்டை வலுவிழக்கச் செய்யும் சிங்களத்தின் தந்திரோபாயங்களுக்குள் சிக்குண்டு போகாமல் இருப்பதற்கு பல்வேறு தளங்களில் விடுதலைக்கான செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட வேண்டும். தாயகத்தில் தமிழ் தேசிய அரசியல் தலைமைகளிடம், தமிழ் அரசியல் விடுதலைக்கான அடிப்படைக் கோட்பாடுகளைத் தக்கவைப்பதிலும் தாயகத்திற்கு வெளியே, அக் கோட்பாடுகளைப் பலமடையச் செய்யும் செயற்பாடுகளை முன்னெடுக்கக்கூடிய வகையிலும் மனப்போக்கில் மாற்றங்கள் நிகழவேண்டும். அதன் திரட்சிதான் விடுதலைப் போராட்டத்தின் வெற்றிக்கான அடித்தளமாக அமையும்.

எனவே பதவிகளின் தக்கவைப்பு என்பதை விடுத்து உண்மையான கௌரவமான அரசியல் முன்னெடுப்பிற்காகத் துறவறம் பூணக்கூடிய மனோநிலையில் தாயகத்தில் தேசியத்தை பேசும் அரசியல் தலைமைகள் தங்களது செயற்பாடுகளை முன்னெடுப்பார்களா?

கூட்டமைப்பின் அரசியல் நகர்வு மீது வைக்கப்படும் விமர்சனங்களைக் கருத்திற் கொண்டு ஒரு திறந்த விவாதத்தை நடாத்தி மக்களுக்கு விளக்கமளிப்பார்களா? தமிழ்மக்களின் அரசியல் அடிப்படைகளின் அடித்தளத்தில் தமது அரசியல் நகர்வுகளைச் செய்வார்களா? என்பதுதான் சராசரி தமிழர்களின் எதிர்பார்ப்பாகும்.

# பொருளாதார நெருக்கடியில் வன்னி மக்கள்
# அதிகரிக்கும் கடன்சுமைகள்

**- கிருஷ்ணமூர்த்தி -**

ஒரு காலத்தில் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி சீட்டுக் கட்டிச் சம்பாதித்துச் சீதனத்துக்குக் காசு சேர்த்தவர்கள் ஈழத்தமிழர்கள். பிறகு தங்களின் சம்பாத்தியங்களை வங்கிகளில் வைப்பிலிட்டுச் சேமித்தார்கள். வங்கிகளில் சேமிப்பது பாதுகாப்பாகவும் வசதியாகவும் இருந்தது அவர்களுக்கு. யுத்தச் சூழலில் இது இன்னும் பாதுகாப்பானதாகத் தோன்றியது.

இலக்கங்கள் கூடக் கூட சேமிப்பின் மகிழ்ச்சி உச்சத்துக்கு ஏறும். அதை விட அதிலொரு பெருமை வேறு.

இதனால் தமிழ்ப்பகுதிகளில் இயங்கிய வங்கிகள் சேமிப்பில் முதலிடம் வகித்தன. ஆனால் தெற்கு மற்றும் மேற்கிலுள்ள சிங்களப்பகுதிகளின் வங்கிக் கிளைகள், சேமிப்புக்குப் பதிலாகக் கடனைத் தாராளமாக வழங்கிக் கொண்டிருந்தன. சிங்களவர்கள் சேமிப்பதற்குப் பதிலாகக் கடனை வாங்கிக் கொண்டிருந்தனர்.

இதை மறுவளமாகப் பார்த்தால் தமிழர்களின் காசில் சிங்களவர்கள் வாழ்ந்தனர் எனலாம். அவர்கள் வங்கிகளில் குறைந்த வட்டிக்குக் கடனை வாங்கி தங்களுடைய தொழில் முயற்சிகளைச் செய்தனர். முதலீடுகளிலும் தாராளமாக ஈடுபட்டனர். வடக்குக் கிழக்கையும் விட ஏனைய பகுதிகளில் நிலவிய ஒப்பீட்டளவிலான அமைதிச் சூழல் இதற்கு மேலும் சாதகமான வாய்ப்புகளை வழங்கியது.

சேமிப்பதற்குப் பதிலாகத் தாராளமாகச் செலவு செய்யும் பழக்கம் சிங்களவர்களுக்கு எப்போதும் அதிகம். செலவு செய்வதற்காகவே சிங்களவர்கள் கடுமையாக உழைப்பார்கள் என்று தென்பகுதியில் நீண்டகாலம் இருந்த நண்பர்கள் சொல்வர். உழைப்பதைத் தாராளமாகச் செலவழிக்கும் இயல்பு அவர்களிடம் உண்டு. விதவிதமாகச் சாப்பாடுவதிலும் சுற்றுலாக்களுக்குப் போவதிலும் கொண்டாட்டங்களில் தாராளமாகச் செலவழிப்பதிலும் அலாதிப்பிரியம் அவர்களுக்கு.

நான் சிறுவனாக இருந்த காலத்தில் தெற்கிலிருந்து தினமும் பஸ் வண்டிகளில் சுற்றுலாவாக ஏராளம் சிங்களவர்கள் வடக்கே வருவர். வசதியுள்ளவர்கள் தான் இப்படி வருவதாக யாரும் எண்ண வேண்டாம். மிக வசதி குறைந்தவர்கள் கூட குடும்பம் குடும்பமாக வருவார்கள்.

அப்படி வருகிறவர்களுடைய உடற்தோற்றத்திலும் உடைகளிலும் அவர்கள் உடல் உழைப்புச் செய்யும் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் என்று தெரியும். ஆனால் ஊர்களைப் பார்ப்பதிலும் பயணங்களைச் செய்வதிலும் அவர்களுக்கு நிறைய விருப்பம் என்றபடியால் செலவைப் பற்றிக் கவலைப்படாமல் இப்படி வருவார்கள்.

இப்படியான இயல்புள்ள சிங்களவர்கள் முதலீகளைச் செய்யவும் ஏதாவது தொழில்களை ஆரம்பிக்கவும் வங்கிகளில் தாராளமாகவே கடன்களை எடுத்தார்கள். வடக்கிலே குறைந்த வட்டியைக் கொடுத்துத் தமிழர்களின் சேமிப்பைப் பெற்றுக் கொண்ட வங்கிகள், கூடுதலான வட்டிக்குச் சிங்களவர்களுக்குக் கடன்களைக் கொடுத்தன.

போதாக்குறைக்கு போர் நடந்த காலத்தில் அரசாங்கமே தமிழர்களின் சேமிப்பைப் போருக்குப் பயன்படுத்தியதாகவும் ஒரு அபிப்பிராயம் உண்டு. வெளிநாடுகளில் இருந்து போருக்காகப் பட்ட கடன் போதாதென்று வங்கிகளில் இருந்த சேமிப்பை அரசாங்கம் கடனாகப் பெற்றுப் போருக்குப் பயன்படுத்தியதாக அந்த நாட்களில் செய்திகள் வெளியாகியிருந்தன.

எது எப்படியோ அன்று இப்படியாக இருந்த ஒரு நிலைமை இன்று மாறியிருக்கிறது. இது யுத்தம் ஏற்படுத்திய மாற்றம். இப்பொழுது தமிழர்களும் வங்கிகளில் தாராளமாகக் கடன்களை எடுக்கத் தொடங்கியிருக்கிறார்கள். அதிலும் வன்னியில் வங்கிக் கடன்களைப் பெறாத குடும்பங்களே இல்லை. கடன் படவில்லை என்றால் அவர்களால் வாழவே முடியாது என்ற நிலை. இந்த நிலையில் எப்படி கடனை எடுக்காமல் இருக்க முடியும்?



வன்னியில் நடந்த இறுதிப்போர், எல்லோரையும் அகதிகளாக்கியது. அகதிகளோ எல்லாவற்றையும் இழந்து விட்டவர்கள். எனவே இந்தப் போர் இன்று எல்லோரையும் அகதிகளாக்கிக் கடனாளிகளாக்கி விட்டது.

இவர்கள் சாதாரண கடனாளிகளில்லை. பெருங்கடனாளிகள். எதற்கும் கடன் எடுக்க வேண்டும் என்பதால் எல்லோரும் இரண்டு மூன்று கடன் என்று எடுத்துப் பெருங் கடனாளிகளாகிக் கொண்டேயிருக்கிறார்கள். வட்டியைக் கட்ட முடியாமல் மேலும் புதிய கடனெடுத்து பழைய கடனின் வட்டியைக் கட்டுகிறார்கள். பிறகு புதிய கடனுக்காக வேறு கடனை எடுக்கிறார்கள். தொடர் கடன்கள். நிரப்பவே முடியாத கடன்கள்.

வங்கிகளும் தவிச்ச முயலை அடிப்பதைப் போல பாதிக்கப்பட்ட மக்களை வைத்துக் கடனைக் கொடுத்து வட்டியையும் முதலையும் கறக்கின்றன. கடன் கொடுப்பதற்காகவே ஏராளம் வங்கிகள். ஏராளம் கிளைகள். ஏராளம் திட்டங்கள்.

போருக்குப் பிந்திய வடக்கில் 64 நிதி நிறுவனங்கள் தங்களுடைய கிளைகளைத் திறந்து கடன் திட்டங்களை ஆரம்பித்திருக்கின்றன. ஊர் ஊராக வீடு வீடாகக் கடன் திட்டங்களைப் பற்றிய பிரச்சாரம் வேறு.

சனங்களைக் கடனாளிகளாக்குவதற்கே அரசாங்கமும் திட்டமிட்டுள்ளது போலும் இல்லையென்றால் அது பாதிக்கப்பட்ட மக்களுக்கான உதவித் திட்டங்களையும் நிவாரணத்தையும் வழங்கியிருக்கும். அழிவுகளை முழுமையாகப் புனரமைத்திருக்கும்.

ஆனால் அப்படியான எதையும் அது செய்யவில்லை. அப்படியான எதையும் செய்யவும் அது யோசித்திருப்பதாகத் தெரியவில்லை.

சிறு உதவிகள் எந்த நிலையிலும் இந்த மக்களுக்குப் போதியதாக இருக்காது. முற்றாக இழந்த மக்களுக்கு முழுமைப் படுத்தப்பட்டதொரு உதவித்திட்டமே அடிப்படையான ஆதாரத்தை உருவாக்கும். அந்த அடிப்படையில் இருந்தே அவர்கள் தங்களின் வாழ்க்கையைக் கட்டியெழுப்ப முடியும்.

போரினால் பாதிக்கப்பட்ட மக்களாக இருப்பது வேறு. போரினால் முழுதாகவே அழிவடைந்த ஊர்களில் எல்லாவற்றையும் இழந்த மக்களாக இருக்கும் நிலை வேறு. இரண்டுக்கும் வித்தியாசமுள்ளது.

அரசாங்கம் எந்த வேறுபாட்டைப் பற்றியும் சிந்திக்கவும் இல்லை எந்த வித்தியாசங்களைப் பற்றியும் அக்கறைப்படவும் இல்லை. புலம்பெயர்ந்த தமிழர்களும் தாய்நிலத்தில் இருக்கின்ற தமிழர்களுக்காகப் பாசக்கண்ணீரை வடிக்கிறார்களே தவிர பாசத்துடன் நடப்பதாகத் தெரியவில்லை.

போர் வாழ்க்கையையே மாற்றி விட்டது. தமிழர்களின் பொருளாதாரச் செயற்பாட்டையும் நோக்குநிலையையும் கூட மாற்றி விட்டது. அது சேமிப்புகளைச் சிதைத்து விட்டது. சேமிப்பாளர்களையும் சேமிப்புக் கான அடிப்படைகளையும் கூடச் சிதைத்தே விட்டது.

ஆகவே சேமிப்புக்குப் பதிலாக இப்போது வடக்குக் கிழக்கில் வாழும் தமிழர்கள் கடனுக்காகவே உழைக்கிறார்கள். கடனையும் வட்டியையும் கட்ட வேண்டும் என்ற கடப்பாட்டுக்காக ஓடிக் கொண்டிருக்கிறார்கள். கடன் அவர்களைத் துரத்துகிறது. ஓய்வில்லாமல் ஓடும்படி அது துரத்திக் கொண்டிருக்கிறது.

'முன்னர் போர் துரத்தியது. இப்போது கடன்துரத்துகிறது' என்று ஒரு கடனாளி வேடிக்கையாகச் சொன்னார். அவர் இப்படிச் சொன்ன போதும் அவருடைய இந்தப் பேச்சினுள்ளே ஒருவித துயரம் இழையோடியிருப்பதைக் காணலாம்.

போரின் போது கைகளை கால்களை கண்களை என்று உடல் உறுப்புகளை இழந்தவர்கள் கூட ஓட முடியாத நிலையில் கடனுக்காக ஓடிக் கொண்டிருக்கும் நிலையைக் காணமுடியும்.

ஏதாவதொரு தொழிலைச் செய்ய வேண்டும் என்ற நிலையிலேயே இவர்கள் வங்கிகளில் கடனாளியானார்கள். ஆனால் பட்ட கடனைக் கட்டக்கூடியவாறு உழைப்போ வருமானமோ இவர்களுக்கில்லை.

எவ்வளவு தான் முயன்றாலும் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில் போதிய வருமானத்தை யாராலும் எதிர்பார்க்க முடியாது.

ஏனென்றால் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில் இருக்கும் சனங்களும் பாதிக்கப்பட்டவர்களே. ஆகவே அவர்களிடம் தாராளமாகச் செலவைச் செய்யக்கூடிய வாறான நிதிவளம் இருப்பதில்லை. நிதிவளம் இல்லாத இடத்தில் எப்படி அதிக வருவாயை எதிர்பார்க்க முடியும்? வருவாய் குறைந்த நிலையில் எப்படிக் கடனுக்கும் வட்டிக்குமான உழைப்பை எதிர்பார்ப்பது? ஆனால் ஒன்று - வங்கிகள் வந்த பிறகு ஊர்களில் தவிச்ச முயல் அடிக்கிற நாள் வட்டி அறா வட்டி மீற்றர் வட்டிக் காரர்களின் கைகள் வீழ்ந்து விட்டன. நாடே கடன் பட்டுக் கொண்டிருக்கும்போது குடிமக்கள் கடன்படுவதில் என்ன புதினம் என்று நீங்கள் கேட்கலாம். (30ம் பக்க)

# நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கைக்கு பதிலளித்தது தமிழ்த்தேசியக் கூட்டமைப்பு

**கற்றறிந்த பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கை குறித்து தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆராய்ந்து வெளியிட்டுள்ள பொருள் பொதிந்த உத்தியோகபூர்வ அறிக்கையின் சாராம்சத்தை இங்கு தருகிறோம்.**

*1.* யுத்தத்தினால் கடுமையான பாதிப்பிற்குள்ளான மக்களின் பிரதிநிதிகள் என்ற வகையில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பானது பாதிக்கப்பட்ட மக்களுடைய உண்மை நீதி மற்றும் இழப்பீடு என்பவற்றிற்கான உரிமைகளை உத்தரவாதம் செய்வதான ஒரு நம்பிக்கையான கணக்கொப்புவித்தல் முறையினை மையமாகக் கொண்ட நேர்மையான நல்லிணக்கத்தை எப்போதுமே வலியுறுத்தி வந்துள்ளது.

*2010 ஆம் ஆண்டு மே மாதம் 15 ஆம் திகதியன்று ஜனாதிபதி கற்றுக் கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்கக் ஆணைக்குழுவை அமைத்து அக்குழுவானது கணக்கொப்புவித்தல் தொடர்பான விடயங்களை ஆராயுமென உலகிற்குக் கூறினார்.*

*2.* கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவினது படிமுறைகளும் நடைமுறைகளும் தமிழ் மக்களின் நம்பிக்கையை வெல்லத் தவறியது. அதுமட்டுமன்றி இவ் ஆணைக்குழுவானது கணக்கொப்புவித்தல் நடைமுறைகள் தொடர்பான சர்வதேச நியமங்களை முழுமையாகப் பின்பற்றி அமையவில்லை.

*3.* அங்கத்துவத்தில் காணப்படும் இன மற்றும் பாலியல் ரீதியிலான சமமின்மை, அங்கத்தவர்களிடையே காணப்படும் நலன்ரீதியிலான முரண்பாடும் காப்புரிமையற்ற சுதந்திரம், சர்வதேச மனிதநேய மற்றும் மனித உரிமைகள் சட்டங்களில் அங்கத்தவர்களுக்குப் பொதுவாகக் காணப்படும் பாண்டித்தியமின்மை மற்றும் ஆணைக்குழுவின் பணிப்பாணை, படிமுறை, நடைமுறை ஆகியவை தொடர்பில் பாதிக்கப்பட்டவர்களின் பிரதிநிதிகளுடனோ அல்லது பரந்துபட்ட தமிழ் சமூகத்துடனோ எந்தவிதமான கலந்தாலோசனையிலும் ஈடுபடாமை ஆகியவை இவ்வாணைக்குழுவின் சுதந்திரத்தன்மை மற்றும் நிபுணத்துவம்சார் சந்தேகத்தை ஏற்படுத்துகின்றன.

*4.* மேலும் கற்றுக் கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவினது முறைமையானது ஒப்பீட்டளவில் பாதிக்கப்பட்டவர்களின் கருத்துக்களுக்கு குறைந்தளவு முக்கியத்துவத்தையே வழங்கியது. இவ்வாணைக்குழுவானது யுத்த கடைசிக் கட்டங்களில் நிகழ்ந்த வன்முறைகளுக்கான உண்மையான கணக்கொப்புவித்தலைத் தொடர்ந்து செய்வதற்கான வளங்களையும் அலுவலர்களையும் குறைவாகவே கொண்டிருந்தது. உதாரணமாக இவ் ஆணைக்குழுவானது வடக்கு, கிழக்கில் சாட்சியங்களை திரட்டுவதற்கு செலவழித்த நேரமானது கொழும்பிலே செலவழித்த நேரத்துடன் ஒப்பிடுகையில் மிக மிகக் குறுகியதாகும். கொழும்பில் இடம்பெற்ற விசாரணைகளுக்காக 56 நாட்களை செலவிட்ட ஆணைக்குழு வடக்கிலும் கிழக்கிலும் மொத்தமாக 22 நாட்களை மாத்திரமே செலவிட்டது. அதுமட்டுமன்றி நேரம் பற்றாக்குறையினைக் காரணம் காட்டி ஆணைக்குழு சாட்சியங்களிற்கு குறைவான கால அவகாசமே வழங்கப்பட்டது. பலசந்தர்ப்பங்களிலே எதிர்காலத்தில் உருவாகக்கூடிய சாட்சிகளுக்கு சாட்சியமளிப்பதற்கு வாய்ப்பு வழங்கப்படாததோடு அவர்கள் தமது பிரச்சினையினை எழுத்துவடிவில் ஆணைக்குழுவிற்கு அனுப்புவதற்கு மட்டுமே வேண்டப்பட்டனர்.

*5.* கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவானது சாட்சிகளின் பாதுகாப்பு தொடர்பில் எந்தவொரு சரியான நிகழ்ச்சித்திட்டத்தையும் கொண்டிருக்கவில்லை. விடயங்களை மேலும் பாரதூரமாக்கும் வகையில் ஆணைக்குழுவின் செயற்பாடுகள் நிறைவுற்ற பின்னரான காலப்பகுதியில் சாட்சிகளுக்கு ஏற்படுத்தப்பட்ட பயமுறுத்தல்கள் தொடர்பான முறைப்பாடுகள் மற்றும் மூடிய பாதுகாப்பான இரகசிய அறையில் வழங்கப்பட்ட சாட்சியங்களின் இரகசியத் தன்மையை உறுதிப்படுத்துவதில் தோல்வி ஆகிய வற்றினூடாக பிரதிபலித்த அங்கத்தவர்களின் மனப்பாங்கானது சாட்சிகளின் பாதுகாப்பிற்கு உறுதியான வழிகளில் மேலும் தீங்கை விளைவித்தது. உதாரணமாக சித்திரவதை மற்றும் பாலியல் துன்புறுத்தல் பற்றி முறைப்பாடு செய்த கல்முனையைச் சேர்ந்த சாட்சியொருவர் பின்னர் குற்றவியல் விசாரணைத் திணைக்களத்தின் நாலாம் மாடியிற்கு அழைக்கப்பட்டார். இது அரசு கற்றறிந்த பாடங்களும் நல்லிணக்கமும் ஆணைக்குழுவின் செயல்முறைகளில் கண்காணித்தமையும் சாட்சிகளின் விபரங்கள் வெளியிடப்படுதல் தொடர்பில் ஏற்பட்ட மிக எளிதான இணக்கப் பாட்டையும் உறுதி செய்கின்றது. அரசுக்கெதிராக போர்க்குற்றச்சாட்டுகளை எழுப்புபவர்களுக்கெதிராக இலங்கையில் காணப்படுகின்ற எதிர்ப்புத்தன்மையானது,

குற்றங்களில் தொடர்புடைய மூத்த அரச தரப்பு அலுவலகர்களைச் சிக்க வைக்கும் தன்மைகொண்ட சாட்சியங்களை முன்வைக்கும் சாட்சிகளுக்கும் பாதிக்கப்பட்டவர்களுக்கும் எதிரான பழிவாங்கல்கள் காணப்படமாட்டாது என்பது உறுதி செய்யப்படும் வரை அரசுக்கெதிராக உள்ள போர்க் குற்றங்களை அணுகும் எந்தவொரு கணக்கொப்புவித்தல் முறையும் பிரயோசனமற்றதாகவே அமையும்.

மேலும் தற்போது வெளிநாடுகளில் வசிக்கும் சாட்சிகளின் வீடியோ சாட்சியங்களைப் பதிவு செய்யாமையானது பழிவாங்கப்படுவோம் என்ற பயமற்ற சாட்சிகளின் சாட்சியங்களை இவ்வாணைக் குழு இழக்கச் செய்துள்ளது.

*6.* இவ்வாணைக் குழுவினால் ஒரு வருடத்திற்கு முன்னர் வெளியிடப்பட்ட இடைக்காலப் பரிந்துரைகள் பயனுள்ள வகையில் அமுலாக்கப்படவில்லை.

அமுலாக்கத்தின் பொருட்டு உருவாக்கப்பட்ட முகமையகங்களிடையேயான ஆலோசனைக் குழுவின் அமுலாக்க நடவடிக்கைகளின் முன்னேற்றம் பற்றிய அறிக்கையானது உண்மையான முன்னேற்றமின்மையை மட்டுமே எடுத்துக் காட்டியுள்ளது.

உறுதிப்படுத்தாவிடினும் எளிமையான இவ்விடைக்காலப் பரிந்துரைகளை அமுலாக்குவதில் அரசாங்கத்தின் தோல்வியானது ஆணைக்குழுவின் இறுதிப்

பரிந்துரைகளை அமுலாக்குவதில் அரசின் பொறுப்பின்மையை சமிக்கை செய்கின்றது.

*7.* 2011 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 16ம் திகதியன்று பாராளுமன்றத்திற்கூடாக வெளியிடப்பட்ட கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவினது இறுதி அறிக்கையானது மனிதாபிமான சட்டம் உள்ளிட்ட பல் வேறு பிரச்சனைகளுக்கு தீர்வு காண வேண்டியதாக காணப்படுகிறது. எனினும் இவ்வாணைக்குழுவானது அரசாங்கத்திற்கெதிரான போர்க்குற்றங்கள் மற்றும் மனித குலத்திற்கு எதிராக இழைக்கப்பட்ட குற்றங்கள் என்பவற்றை உள்ளடக்கியதான சர்வதேச மனிதநேயச் சட்ட மீறல்கள் தொடர்பான நம்பகமான குற்றச்சாட்டுக்களை புறக்கணிக்கின்றது. இக் குற்றச்சாட்டானது, உணவு மற்றும் மருந்து போன்றவற்றை இழக்கச் செய்வதற்காக வேண்டுமென்றே வன்னியிலிருந்த மக்களின் எண்ணிக்கையை குறைத்து காட்டியமை, யுத்த சூனிய பிரதேசங்களிலே வேண்டுமென்றே மனிதாபிமானமற்றமுறையிலும் கவனமற்ற முறையிலும் தாக்குதல் நடத்தியமை, வைத்தியசாலைகள் உட்பட பொது மக்கள் நிலைகளின் மீது தாக்குதல் நடத்தியமை, சரணடைந்தவர்களைக் காணாமற் போகச்செய்தமையும் அவர்கள் காணாமற் போவதற்கு காரணமாக இருந்தமையும் போன்றவற்றை உள்ளடக்கும்.

*8.* கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவினது அணுகு முறையும் படிமுறையும் பின்வரும் இரு விடயங்கள் காரணமாக குறைபாடுடையதாக அமைந்தது:

*(1) தெரிந்தெடுக்கப்பட்ட சாட்சிப் பத்திரங்கள் (2) வழங்கப்பட்ட தகவல்களுக்கேற்ற சட்டங்களைப் பிரயோகிக்கத் தவறியமை.*

*9.* இக் குழுவானது வடக்கு கிழக்கில் பணியாற்றிய வைத்தியர்களின் சாட்சியங்களை முக்கியத்துவப் படுத்திருந்த போதும் அவர்கள் சாட்சியங்களை வழங்கிய போது என்ன பின்னணியிலிருந்தார்கள் என்பதை குறிப்பிடத் தவறி விட்டது.



அதாவது அவர்கள் கைது செய்யப்பட்டதும் யுத்தத்தின் இறுதிக் கட்டத்திலே அவர்கள் விடுத்திருந்த அறிக்கையை பின்னர் பொதுமக்கள் முன்னிலையில் பகிரங்கமாக வாபஸ் பெற்றமை என்பவற்றைக் குறிப்பிடலாம். ஆகவே இவ்வைத்தியர்களால் இவ்வாறாக ஆணைக்குழுவிற்கு வழங்கப்பட்ட சாட்சியங்களின் நம்பகத்தன்மை பெரிதும் சமரசம் செய்யப்பட்டன. குறிப்பாக ஒவ்வொரு தாக்குதலும் வீடியோப்படம் பிடிக்கப்பட்டு மேலதிகாரிகளின் முறையான ஒப்புதலுடனேயே நிகழ்த்தப்பட்டன என இராணுவ சாட்சியங்கள் ஒப்புக்கொண்ட போது கீழே தன்னியங்கி வானூர்தி வீடியோப் படங்கள், வான் வழித்தாக்குதல்களின் வீடியோப்படங்கள் மற்றும் இராணுவ ஆவணக்காப்பகம் போன்ற மிக முக்கியமான சாட்சியங்களைப் (37ம் பக்கம் பார்க்க)

# இலங்கையில் இனப்பிரச்சனையை தனி பௌத்த கொள்கைகள் தீர்க்காது

***இலங்கையின்*** *இனப்பிரச்சினைக்கான அரசியல் தீர்வு தொடர்பில் 13வது திருத்தச் சட்டத்தை முழு அளவில் நடைமுறைப்படுத்த வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு என சிறிலங்காவின் அமைச்சர் வாசுதேவ நாணயக்கார தெரிவித்துள்ளார்.*

*அத்துடன் மற்றவர்களின் கருத்துக்கு செவிமடுத்து இந்தியாவுடனோ அல்லது இலங்கைக்கு விஜயம் செய்யும் வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணாவுடனோ முரண்படுவது அர்த்தமற்ற செயல் என அவர் கூறியுள்ளார்.*

*இலங்கையின் இனப்பிரச்சினையை தனி பௌத்த கொள்கைகள் தீர்த்து வைக்கப் போவதில்லை எனக் குறிப்பிட்ட அவர் ஜாதிக ஹெல உறுமய போன்றவர்களின் அரசியல் தீர்வுக்கான எதிர்ப்புகளானது வெறும் அரசியல் நோக்கங்களையே கொண்டது என்றும் தெரிவித்துள்ளார். இது தொடர்பாக சிறிலங்காவின் அமைச்சர் வாசுதேவ நாணயக்கார மேலும் தெரிவித்துள்ளதாவது:*

*'இலங்கையின் இனப்பிரச்சினைக்கான அரசியல் தீர்வாகவே 13வது திருத்தச் சட்டம் அரசியலமைப்பில் உள்ளடக்கப்பட்டது. இதனை இந்தியா மற்றும் சிறிலங்கா அரசாங்கங்கள் ஒப்பந்த ரீதியாக ஏற்றுக் கொண்டுள்ளன. இலங்கையில் கடந்த காலங்களில் போர் இடம்பெற்ற காரணத்தினால் இலங்கையின் இனப்பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண்பது கடினமான இருந்தது. ஆனால் தற்போது அவ்வாறானதொரு சூழ்நிலை இன்றி நாட்டில் சுமூகமான சூழல் ஏற்பட்டுள்ளது. எனவே நிரந்தர அரசியல் தீர்வை ஏற்படுத்த ஏற்ற காலமாகத் தற்போதைய கால கட்டத்தை கூறலாம். இலங்கைத் தமிழ் மக்களின் அரசியல் தீர்வுக்காக 13வது திருத்தச் சட்டத்தை நடைமுறைப்படுத்துமாறு இந்தியா வலியுறுத்துகின்றது.*

*இதனை சிறிலங்கா அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில் சிறிலங்காவின் அரசியலமைப்பில் காணப்படுவதை நடைமுறைப்படுத்தி இனப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டியது அரசாங்கத்தின் கடமையும் பொறுப்புமாகும். 13வது திருத்தச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்கு ஜாதிக ஹெல உறுமய போன்ற சிறுபிரிவினரே எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். இந்த எதிர்ப்புகளும் எவ்வித அடிப்படைத் தன்மையும் அற்றவை. இலங்கைக்கு தனி பௌத்த கொள்கைகள் ஒவ்வாது. மாறாக பல்லின சமூகங்களுககு ஏற்ற கொள்கைகள் அத்தியாவசியமானது' என சிறிலங்காவின் அமைச்சர் வாசுதேவ நாணயக்கார மேலும் தெரிவித்துள்ளார்.*



***அரசியலமைப்புக்கான*** *13வது திருத்தச் சட்டம் இந்தியாவினால் எம்மீது பலவந்தமாகத் திணிக்கப்பட்ட ஒன்றாகும். இதற்கு மக்களுடைய ஆதரவும் இல்லை' எனத் தெரிவித்திருக்கும் சிறிலங்காவின் பிரதான இனவாதக் கட்சியான ஜாதிக ஹெல உறுமய 'இந்தியாவின் தேவைகளுக்காக இதனை நடைமுறைப்படுத்தவோ காணி பொலிஸ் அதிகாரங்களைக் கொடுக்கவோ முடியாது' எனவும் உறுதியாகக் கூறியிருக்கின்றது.*

*'சிறிலங்கா சுதந்திரக் கட்சியுடன் மட்டும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு திருட்டுத்தனமாகப் பேசுவதால் பிரச்சினைகளைத் தீர்க்க முடியாது. சிங்களவர்களின் ஆதரவு இல்லாமல் எதனையும் நடைமுறைப்படுத்த முடியாது. எனவே நாடாளுமன்றத் தெரிவுக்குழு முன்பாகவே பிரச்சினைகள் ஆராயப்பட வேண்டும்' எனவும் ஜாதிக ஹெல உறுமயவின் சட்ட ஆலோசகர் உதயன் கம்பன்பில தெரிவித்திருக்கின்றார். இது தொடர்பில் அவர் மேலும் தெரிவித்திருப்பதாவது:*

*'1956ஆம் ஆண்டு முதல் தமிழ்த் தலைவர்கள் சிறிலங்கா அரசாங்கத் தலைவர்களுடன் பேச்சுவார்த்தைகளை நடத்தியதுடன் பல்வேறு உடன்படிக்கைகளையும் செய்து கொண்டார்கள். இருந்தபோதிலும் எதுவுமே பலனளிக்கவில்லை. சிங்கள எதிர்ப்பு காரணமாகவே அவற்றை நடைமுறைப்படுத்த முடியாமல் போனது. அதனால் அரசாங்கத்துடன் அல்லது சிறிலங்கா சுதந்திரக் கட்சியுடன் மட்டும் திருட்டுத்தனமாகப் பேச்சுக்களை நடத்துவதால் பலன் கிடைக்கப் போவதில்லை.*

*இதனால் அனைத்துக் கட்சிகளையும் உள்ளடக்கிய நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் மூலமாகப் பேச்சுக்களை முன்னெடுக்க வேண்டும். இவ்வாறான பேச்சுக்களின் போது தனி ஈழம் தொடர்பாகவும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் கருத்துக்களை வெளியிடலாம். இவ்வாறு பேச்சுக்களை நடத்துவதே பலளனிப்பதாக அமையும் என்பதுடன் அதன் மூலமாகவே தீர்வைக் காணவும் முடியும். சிங்கள எதிர்ப்பை மீறி எதனையும் செய்ய முடியாது.*

*13வது திருத்தச் சட்டத்தைப் பொறுத்தவரையில் அது இந்தியாவினால் எம்மீது திணிக்கப்பட்ட ஒன்றாகும். அதற்கு மக்களுடைய ஆதரவு கிடையாது. எனவே அதனை நடைமுறைப்படுத்தக் கூடாது. இத்திருத்தம் தொடர்பில் நாடாளுமன்றத் தெரிவுக்குழுவில் விரிவான முறையில் ஆராயப்பட வேண்டும். அத்தோடு மக்களின் ஆதரவும் பெறப்பட வேண்டும். இந்தியாவின் தேவைகளுக்காக மட்டும் இதனை நடைமுறைப்படுத்த முடியாது.*

*காணி மற்றும் பொலிஸ் அதிகாரங்கள் மாகாண சபைகளுக்கு வழங்கப்படக் கூடாது. இவ்வாறு கொடுக்க முற்பட்டால் அதனை நாம் கடுமையாக எதிர்ப்போம். இந்த விடயங்களில் இந்தியாவின் அழுத்தங்களைக் கவனத்தில் கொள்ள முடியாது' எனவும் உதயன் கம்பன்பில மேலும் தெரிவித்துள்ளார்.*

# மனசுலாவிய வானம்
# 41



- ப.ஸ்ரீஸ்கந்தன் -

# யாழ்ப் பயணம் 1994

(சென்றவாரத் தொடர்ச்சி) வீடு நிறையவே மாறிவிட்டிருந்தது.

அப்பாவின் நச்சரிப்புத் தாங்காமல் தண்ணீர் ஊற்றிய தென்னங்கன்றுகள் நெட்டுயர மரமாகிக் காய்க்கின்றன.

மாங்கன்றுகள் கிளைகள் வீட்டைத் தொடும்படி மரமாகி நின்றன.

அன்னமுன்னா அழிந்து விட்டது.

விளாத்திக்கு வயது வந்து கொள்ளி வைத்தாயிற்று.

வேம்புமரம் புதுவீட்டின் கதவுகளாக மாறிவிட்டன.

முள்முருக்கும் பூவரசும் இன்றும் வளவின் எல்லை வீரர்களாக நிற்கின்றன.

கிணற்றில் பாசி அப்படியே இருக்கிறது.

சிவந்த கம்பளிப் பூச்சி இன்னமும் சாகவில்லை. கூடவே அட்டையும் தேளும் மண்புழுவும்.

சிறு வயதில் பந்து விளையாடிய பக்கத்து வளவு கூறுகளாக்கப்பட்டு வேலிகள் குறுக்கிடுகின்றன.

நிறைகுடமும் குத்துவிளக்கின் உருவமும் வரும்படியாக நான் வரைந்து கொடுக்க உருவாக்கப்பட்ட எங்கள் வீட்டுப் படலை இன்னும் உறுதியாய்.

முன்சுவரில் பொருத்தப்பட்டிருக்கும் மின்சார மீற்றர் பெட்டியின் வளையத்தின் இயக்கம் நின்று வருடங்கள் ஆகிவிட்டன.

எனதும் சகோதரர்களினதும் சிறு வயதுப் படங்கள் சுவரில் மாட்டியபடியே இருக்கின்றன.



ஏதோ பித்துப் பிடித்தவன் போல் மாறி மாறி அறைகளுக்குள் நடந்து திரிந்தேன்.

வளவுக்குள் போனேன். கிணற்றடியைச் சுற்றினேன்.

கோடிப்பக்கம் போனேன். ..... கிடுகு வேலித் தட்டியைத் தொட்டுப் பார்த்தேன்.

மண்ணிலே குந்தியிருந்தேன்.

எனது மண்.

அதிகாலை ஐந்து மணிக்கு ஊர்க் கோவிலின் பூசைக்கான ஆயத்தமணி அடிக்கிறது. அதையும் மீறி நல்லூர்க் கந்தனின் "டாங்கு டாங்கு..." என்ற மணியின் நாதம் என் நரம்புகளை அதிரச் செய்தன. எத்தனை நாள் ஆகிவிட்டது கேட்டு. ஓயாமல் காரின் இரைச்சலையே கேட்டுப் பழகிப் போன எனக்கு இவை சுகந்தத்தைத் தந்தன.

மாசிப் பனிக்குள்ளும் ஆறு மணிக்கெல்லாம் யாழ்நகர வீதிகள் அமர்க்களமாகி விடுகின்றன.

யாழ்ப்பாணத்தில் சைக்கிள் தான் அப்போதைய தேசிய வாகனமாக இருந்தது. புதிய சைக்கிளின் விலை 7000 ரூபாவாக இருந்தது. பருத்தித்துறை கொடிகாமம் பகுதியில் இருந்து யாழ்.பல்கலைக்கழகத்திற்கு மாணவர்க் சைக்கிளிலேயே வந்து போனார்கள். சைக்கிளில் விறகுகளைக் கட்டி வந்து விற்று வாழ்வை நடாத்தியவர்களும் உண்டு. இன்று எல்லாமே மோட்டார் சைக்கிள் மயமாக மாறி விட்டது. பாடசாலை மாணவர்களே மோட்டார் சைக்கிளில் தான் செல்கிறார்கள்.

நான் ஒன்றுவிட்ட சகோதரியின் சைக்கிளை எடுத்துக் கொண்டு யாழ்ப்பாணத்தை விட்டு வெளியேறுவதற்காக "பாஸ்" பெறுவதற்காக ஸ்டேசன் வீதியிலுள்ள விடுதலைப்புலிகளின் அலுவலகத்துக்குச் சென்றேன். நான் வந்த விஷயம் பற்றிச் சொன்ன போது ஊர்க் கிராம சேவகரிடம் கடிதம் வாங்கி வரும்படி சொன்னார்கள். விதானையாரைக் காண றக்கா றோட்டால் விழுந்தடித்து வந்த போது நினைத்துக் கொண்டேன். "இந்த இடத்தில் தான் எங்கட ஆனந்த ராஜா மாஸ்டரை சுட்டிருப்பார்கள்" விதானையின் கடிதத்தைப் பெற்று புலிகளின் அலுவலரிடம் கொடுத்தபோது கனடாவில் கேள்விப்பட்ட கதைகளும் கப்பலில் சொல்லப்பட்ட கதைகளும் நினைவில் வந்து பயப்படுத்தின. ஆனால் ஒரு சல்லிக் காசு கூட அவர்கள் என்னிடம் கேட்கவில்லை. "பாஸ்" உடன் வெளியே வந்தேன். 'பிணை நிற்பவர்கள் நன்றாக யோசித்து முடிவெடுங்கள் என்ற வாசகம் வாசலில் இருந்த கரும்பலகையில் காணப்பட்டது.

நான் சென்றவழியில் யாழ்ப்பாணச் செயலகம் குண்டுத் தாக்குதலில் நொறுங்கிப் போயிருந்தது. சென்.ஜேம்ஸ் தேவாலயமும் சிதறுண்டு கிடந்தது. சின்னக்கடை முன்பு போல் சுறுசுறுப்பாக இல்லை.

மாநகரசபைக் கட்டிடம் தரைமட்டமாகக் கிடந்தது. சுப்பிரமணியம் பூங்கா அழிந்துவிட்டது. யாழ். பொலிஸ் நிலையம் தகர்ந்து போயிருந்தது. துரையப்பா ஸ்டேடியம் புற்களின் காடாகக் காட்சியளித்தது. டச்சுக் கோட்டையின் பெரும் பகுதிகள் இடிக்கப்பட்டு விட்டன. தந்தை செல்வாவின் தூய வெண்ணிறத் தூபி இன்னமும் உறுதியாய்......

உள்ளம் பற்றி எரிய புகை கவ்விக் கிடந்த யாழ். நூலகத்தின் வெற்றுச் சுவர்களைப் பார்த்தேன். மீண்டும் மீண்டும் அழிக்கப்பட்ட தமிழாராய்ச்சி நினைவுத் தூபிகள் புனரமைக்கப்பட்டிருந்தன. வீரசிங்கம் மண்டபத்தின் கூரையைக் காணவில்லை. இங்கு பார்த்த நாடகங்களை ஒருமுறை எண்ணிப் பார்த்தேன். மகாகவியின் கோடை. அம்பலத்தாடிகளின் கந்தன்கருணை பாலேந்திராவின் கண்ணாடி வார்ப்புக்கள் என்பன மறக்க முடியாதன.

முனியப்பர் கோவிலில் மூன்று சாமப் பூசைகள் நடைபெற்றன. தினகரன் விழா என்றும் தமிழாராய்ச்சி மாநாட்டு என்றும் மனித வெள்ளமாகக் காட்சி தரும் அந்த முற்றவெளியில் சன நடமாட்டம் அற்ற இடர்பாடுகளுக்கிடையே நின்றிருந்தேன். மண்டைதீவு இராணுவ முகாம் ஷெல்லடி பயமுறுத்த சைக்கிளை பஸ் நிலையப் பக்கம் திருப்பினேன். பஸ் நிலையம் குண்டுகள் விழுந்து ஏற்படுத்திய பள்ளத்தில் பழையநீர் வெள்ளமாக நின்றது. வைரமாளிகையும் மக்கள் குரலும் எங்கு போயிருப்பார்கள்? மாலை ஆறு மணிக்கெல்லாம் கடைகள் பூடப்பட்டு நகரம் வெறிஞ்சோடிப் போனது. இருளுக்கு முன்பாக இரவுச்சாப்பாடு நடந்தது. வெளிச்சம் எல்லாம் மண்ணெண்ணெயால் தான். நீலக் கலரில் கடைகளில் மண்ணெண்ணை அடுக்கப்பட்டிருக்கும். இரவு 8.00 மணியிலிருந்து 9.00 மணி வரை புலிகளின் வானொலி நிகழ்ச்சியை சைக்கிள் டைனமோ பழைய கார் பற்றி மூலம் கேட்டார்கள். வாசிகசாலையில் சைக்கிள் ஒருவர் சுழற்ற டைனமோ மூலம் பிபிசி செய்திகளைக் கேட்டதையும் பார்த்தேன்.

அடுத்தநாள் அப்பாவுக்கு வருத்தம் கடுமையாகிப் போனது. பாலசிங்கம் அங்கிள் வீட்டுக்கு ஓடிச் சென்றேன். சாப்பிட்ட அரைகுறையில் கையைக் கழுவி விட்டு மருந்துப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு என்னுடன் வந்தார். அப்பா உயிர் பிழைப்பதற்கு ஊசி போடவேண்டும். ஆனால் மருந்து அப்பாவின் உடலில் ஏறவில்லை. மூன்று முறை முயற்சித்து விட்டு என்னை நிமிர்ந்து பார்த்தார். அப்படியே விட்டு விடுவோமா என்பது போலிருந்தது அவர் பார்வை. இன்னும் ஒருக்கால் முயற்சி செய்யுங்கோ என்றேன். இம்முறை மருந்து ஏறிவிட்டது. தற்காலிக உயிர்ப்புத்தான். அந்தக் கணங்கள் மிகவும் கனமாக இருந்தன.



அலை ஆசிரியர் யேசுராசாவும் ஓவியர் மாற்கு மாஸ்டரும் வந்து அப்பாவைப் பார்த்து விட்டுச் சென்றார்கள். அவர்களோடு கூட பேசுகின்ற மனநிலையில் நான் இருக்கவில்லை.

அடுத்தநாள் திலீபன் மரணித்த இடத்தைப் பார்ப்பதற்காக நல்லூருக்குச் சென்றேன். வடக்கு வீதியில் வந்த ஒரு பெண்மணியிடம் திலீபன் மரணித்த இடம் எது என்று கேட்டேன். இடத்தைக் காட்டிய அவள் உளவாளியா என்பது போல் என்னைப் பார்த்தார். காது கிழிந்த ஆச்சிமார் இப்பவும் கச்சான் விற்பதைக் காண முடிந்தது. நாவலர் மண்டபத்தில் இயக்கத்தினரால் சைக்கிள் பாதுகாப்பு நடத்தப்பட்டது.

அப்போது திட்டமிடல் பணிப்பாளராக எனது ஊரவரான பத்மநாதன் அவர்கள் கடமையாற்றினார். பின்னால் யாழ்.அரச அதிபராக இருந்தவர். அவரைச் சந்திக்கச் சென்றபோது அலுவலகத்துக்கு இரு சிறுமிகள் வந்தார்கள். பெரிய சிறுமிக்கு பத்து வயது இருக்கும். மற்றவளுக்கு எட்டு வயது இருக்கலாம். நேராக அவரது மேசைக்கு முன் வந்து நின்று பெரியவள் கேட்டாள். "எப்படி இருக்கிறீர்கள்"

"சுகமாக இருக்கிறன்"

"சீனி இல்லாமல் போகும் என்று கதைக்கினம். எங்களுக்குத் தேவையாக இருக்கு"

"கொஞ்சம் ஸ்டொக் இருக்கு. தரலாம்"

பிறகு சின்னவள் தொடர்ந்தாள். அங்கிள் நீங்கள் துண்டு தந்து கடைசியாய் வாங்கின பென்சில் சரியில்லை. கூர் உடையுது என்று சொல்லினம்... நல்ல பென்சிலுக்குத் துண்டு தாங்கோ"

அவர்கள் போனதும் ஆச்சரியத்துடன் யார் இவர்கள் என்று அவரிடம் கேட்டேன்.

வந்தவர்கள் அருகில் இருக்கும் அநாதை இல்லத்தைச் சேர்ந்தவர்கள். என்றும் அவர்கள் இருவரும் அங்குள்ள பிள்ளைகளின் தலைவிமார் என்றும் சொன்னார்.

நான் அதிர்ந்து போனேன். இந்தச் சின்னப் பிள்ளைகளுக்கு இவ்வளவு பொறுப்புணர்வு எப்படி வந்தது? என் கண்கள் உண்மையில் அன்று கலங்கின. இந்தச் சனியின் பிடித்த சண்டை நிற்காதா ஏன்று மனம் ஏங்கியது.

பல காலமாக அந்த இரு சிறுமிகளும் என் மனதை அலைக்கழித்துக் கொண்டனர். யாழ்ப்பாண இடப்பெயர்வின் போது முல்லைத்தீவுக்கோ கிளிநொச்சிக்கோ அவர்கள் சென்றிருக்கக் கூடும். பிறகு சுனாமியால் அள்ளுண்டு போனார்களா? அல்லது முள்ளிவாய்க்காலில் முடிந்து போனர்களா அல்லது முகாம் ஒன்றில் தஞ்சம் புகுந்தார்களா? ஒன்றும் அறிய முடியவில்லை.

(மனசு உலாவும்)

## 2வது ஆண்டு நினைவஞ்சலி



### திருமதி
### பரமேஸ்வரி அம்மா பத்மநாதமுதலி

மலர்வு:- 25.08.1926 உதிர்வு:- 07.01.2010

இராமநாதன் கல்லூரி பழைய மாணவி திருமதி பரமேஸ்வரிஅம்மா பத்மநாதமுதலி அவர்களது இரண்டாது ஆண்டு நினைவுநாள் திதியை முன்னிட்டு 16 ஜனவரி 2012 திங்கட்கிழமை அன்னாரது குடும்பத்தினர் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு இரண்டு வேளை உணவு அளித்தனர்.

அன்னாரின் ஆத்மா சாந்தியடைய அன்பு இல்லக் குழந்தைகளுடன் இணைந்து ஈழநாடும் ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றது.

## 3வது ஆண்டு நினைவஞ்சலி



### அமரர் உயர்திரு
### வேலாயுதம் கந்தசாமி அவர்கள்
### (அனலைதீவு)

அனலைதீவைப் பிறப்பிடமாகக் கொண்ட அமரர் திரு வேலாயுதம் கந்தசாமி அவர்களது அவர்களது மூன்றாவது ஆண்டு நினைவுநாளை முன்னிட்டு 24 ஜனவரி 2012 செவ்வாய்க்கிழமை அன்னாரது குடும்பத்தினர் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு ஒருநாள் சிறப்பு உணவு அளித்தனர்.

அன்னாரின் ஆத்மா சாந்தியடைய அன்பு இல்லக் குழந்தைகளுடன் இணைந்து ஈழநாடும் ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றது.

## 31வது நாள் நினைவஞ்சலி



### அமரர் உயர்திரு
### சுப்பிரமணியம் மகாலிங்கம்

யாழ்ப்பாணம் கரவெட்டி மேற்கைப் பிறப்பிடமாகக் கொண்ட ஒய்வு பெற்ற முன்னாள் இலங்கை வங்கி முகாமையாளர் திரு சுப்பிரமணியம் மகாலிங்கம் அவர்களது 31வது நினைவு நாளையொட்டி அன்னாரது குடும்பத்தினர் 20 ஜனவரி 2012 வெள்ளிக்கிழமை அன்பு இல்லக் குழந்தைகளுக்கு ஒரு நாள் சிறப்பு உணவு அளித்தனர்.

தொடர்புகளுக்கு: பவானி விமலேஸ்வரன் (மகள்) 416 287 0801 மாலினி நித்தியானந்தம் (மகள்) 416 412 1060

அன்னாரின் ஆத்மா சாந்தியடைய அன்பு இல்லக் குழந்தைகளுடன் இணைந்து ஈழநாடும் ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றது.

## 31வது நாள் நினைவஞ்சலி



### அமரர் உயர்திரு பிரதீப் சிவநாதன்
### (புங்குடுதீவு)

யாழ்ப்பாணம் புங்குடுதீவைப் பிறப்பிடமாகக் கொண்ட திரு பிரதீப் சிவநாதன் அவர்களது 31வது நினைவு நாளையொட்டி அன்னாரது குடும்பத்தினர் 26 ஜனவரி 2012 வியாழக்கிழமை அன்பு இல்லக் குழந்தைகளுக்கு ஒரு நாள் சிறப்பு உணவு அளித்தனர்.

அன்னாரின் ஆத்மா சாந்தியடைய அன்பு இல்லக் குழந்தைகளுடன் இணைந்து ஈழநாடும் ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றது.

## 14 வது பிறந்தநாள் வாழ்த்து



### செல்வன் ந.பவீஸ்னன்

கனடா ஒசாவாவில் வசிக்கும் திரு, திருமதி நகுலேஸ்வரன் நந்தினி தம்பதிகளின் செல்வப் புதல்வன் பவீஸ்னன் 16 ஜனவரி 2012 அன்று தனது 14வது பிறந்த நாளை வெகு சிறப்பாகக் கொண்டாடினார்.

அன்றைய நாளில் அன்பு இல்லக் குழந்தைகளுக்கும் ஒரு நாள் சிறப்பு உணவு வழங்கிக் கொண்டாடும் பவீஸ்னனை அன்பு இல்லக் குழந்தைகள் சார்பிலும் ஈழநாடு வாசகர்கள் சார்பிலும் வாழ்த்துகின்றோம். வாழ்க பல்லாண்டு!

**நல்லிதயம் கொண்ட அன்பானவர்களே! உங்கள் அன்புக்குரியவர்களின் பெயரால் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு நீங்கள் உணவு வழங்கும் போது உங்கள் நினைவாக புகைப்படங்களை நாம் இலவசமாகப் பிரசுரிக்கின்றோம்.**

# போரினால் பெற்றோரை இழந்த அன்பு இல்லக் குழந்தைகளை வாழ வையுங்கள்

*அன்புத் தமிழ்நெஞ்சங்களே! குழந்தைகள் எல்லோரும் தெய்வத்திற்கு சமன். குழந்தைகளுக்கு நாம் செய்யும் பணி தெய்வத்திற்கு செய்யும் பணிக்கு சமன். சிறார்கள் வாழும் நிலையமும் ஒரு கோவில் தான். இந்தக் குழந்தைகளுக்கு தாய், தந்தை, உறவுகள் என்று எவருமே இல்லை.*

*யார் அவர்களுக்கு உதவுகின்றார்களோ அவர்களே தாயுமாகி தந்தையுமாகி தெய்வமுமாகி நிற்கின்றார்கள். அந்த வகையில் நீங்களும் உங்கள் அன்புக்குரியவர்களின் நினைவாக ஒருவேளை உணவுக்கு அல்லது ஒரு நாள் உணவுக்கு உதவுவதன் மூலம் அந்தக் குழந்தைகளுக்கு வாழ்வளியுங்கள். அன்னதானம் ஆயிரம் கோவில்களில் கொடுப்பதை விட கோடி புண் ணியம் உங்கள் வாசல் கதவைத் தேடி வரும் என்பதை மறவாதீர்கள்.*

*நாம் மனிதர்களாகப் பிறந்ததிற்கு ஓர் அர்த்தம் தேவை. மற்றவர்களுக்கும் சிறு உதவிகளை செய்வதன் ஊடாக கொஞ்சம் புண்ணியத்தையும் தேட வேண்டும்.*

*இளம் துளிர்களை எப்படி பராமரிக்கின்றோம் என்பதில் தான் அவர்களின் எதிர்காலம் தங்கியிருக்கின்றது. உங்களால் முடிந்தளவு நன்கொடையை இந்த அன்பு இல்லக் குழந்தைகளுக்கு வழங்குங்கள்.*

*இதுவரை அன்பு இல்லத்தில் 58 குழந்தைகள் இருந்தார்கள். இவர்களில் 32 பேர் மாவீரர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். கடந்த 25டிசம்பர் 2011 அன்று புதிதாக மேலும் 50 ஆண் பிள்ளைகளும் 65க்குமேற்பட்ட பெண் பிள்ளைகளும் இணைத்துக் கொள்ளப் பட்டுள்ளார்கள். இவர்களிலும் அநேகர் மாவீரர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அடங்குகின்றனர்.*

*அத்துடன் போரின் கொடுமையால் பெற்றோரைப் பறி கொடுத்தவர்கள் மட்டுமல்ல உறவுகளால் வாழ்க்கையைத் தொலைத்தவர்கள் கல்வியைத் தொலைத்தவர்கள் என பலரும் அடங்குகின்றனர். ஏறக்குறைய 182 பிள்ளைகள் தற்போது அன்பு இல்லத்தில் வாழ்கின்றார்கள்.* ***இவர்களுடைய உணவுத் தேவையை மாத்திரம் கனடா வாழ் அன்புத் தமிழ் மக்களாகிய உங்களை நம்பி நாம் பொறுப்பேற்றுள்ளோம். எனவே பெப்ரவரி மாதம் முதல் ஒரு நாள் முழுவதுக்குமான உணவுக்காக குறைந்த பட்சம் 180.00 டொலர்கள் வரும் என்பதை உதவி செய்யும் அன்பர்கள் கவனத்தில் கொள்க. (ஒரு பிள்ளைக்கு ஒரு நாள் உணவுக்கு ஒரு டொலர்)***

*நன்கொடை வழங்கும் அன்பர்களது பெயர்கள் ஈழநாட்டில் பிரசுரமாவதுடன் எந்தத் திகதியில் என்ன காரணத்துக்காக வழங்கப்படுகின்றது என்ற விபரமும் பிரசுரமாகும். அத்துடன் உங்கள் புகைப்படங்களை எமக்கு அனுப்பி வைத்தால் அவையும் பத்திரிகையில் பிரசுரமாகும். உங்களது உதவிகள் அனைத்தும் சரியான நேரத்தில் அவர்களைச் சென்றடைந்து உங்களது நிகழ்வுகள் சரியான திகதியில் நடைபெறும் என்பதை உள்ளத் தூய்மையோடு தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.*

போரின் கொடுமைகளால் சப்பித் துப்பப் பட்ட பின் தொடர்ந்தும் எமது இளைய தலைமுறை - நாளைய சந்ததி வாழ்நாள் பூராகவும் நிர்க்கதியாகாமல் வளமான வாழ்வு வாழ வேண்டுமானால் தமிழர்களாய்ப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் உதவ வேண்டும்.

போரின் வடுக்களையும் சோதனை களையும் பார்க்க வேண்டுமாயின் அநாதரவாக உள்ள குழந்தைகளின் முகத்தில் கண்டு கொள்ளலாம்.

குழந்தைகள் நாளைய தலைவர்கள், நாட்டின் கண்கள் என்று கூறுவார்கள். ஆனால் நமது தமிழ்ச் சிறார்களின் கண்களில் - மனதில் போரின் வடுக்கள் மட்டுமே காணப் படுகின்றன.

பெற்ற தாயைக் குற்றுயிராயக் கண்ட பிள்ளைகள்,

தந்தையைத் தலையற்ற முண்டமாய்ப் பார்த்த பிள்ளைகள்,

ஷெல்லடியில் சொந்தச் சகோதரனைப் பறி கொடுத்து விட்டு பரிதவிக்க பிள்ளைகள்,

சொந்த பந்தங்களின் உயிரற்ற உடல் களைக் கடந்து வந்த உறவுகள்.

இப்படி எண்ணற்ற பிள்ளைகளில் சிலரைத் தான் எம்மால் பொறுப்பேற்று அவர்களது மனநிலையை மாற்றி உணவு உடை உறையுள் கொடுத்து பாடசாலை செல்லும் வசதியை ஏற்படுத்தி - பிரத்தியேகக் கல்வியைக் கொடுத்து அன்பு இல்லத்தில் பரா மரித்து வருகின்றோம்.

"தயாள குணம் உள்ளவர்கள் கடவுளுக்கு அருகில் இருக்கிறான். மனிதனுக்கு அருகில் இருக்கிறான் சொர்க்கத்திற்கு மிக அருகில் இருக் கிறான். நரகத்தின் வெகுதூரத்தில் தள்ளி இருக்கிறான் என்கிறது வேத நூல்.

என் இனிய உறவுகளே!

உங்களால் முடிந்த உதவியை இந்தப் பிள்ளைகளுக்கு வழங்குங்கள். ஆயிரம் கோவில்களுக்குச் சென்று தேடுகின்ற புண்ணியம் இவர்களது வாழ்த்து ஒலியில் கிடைக்கும்.

அன்பர்கள் உதவி செய்யும் போது அவர்களது நிகழ்வுகள் ஒரே திகதியில் நடை பெற்றாலும் உணவு வழங்கல் பிறிதொரு நாளில் அதாவது யாரும் உதவி வழங்காத நாளில் வழங்கப்படும் என்பதை மனதில் கொள்க.

அன்புக்குரியவர்களே! உங்கள் வாழ்வில் - உங்கள் மனதில் பதிந்துள்ள இன்ப நாட்களை - நினைவு நாட்களை எண்ணி அன்றைய நாளில் இந்தப் பிள்ளைகளுக்கு ஒரு நாள் உணவு வழங்குங்கள். இந்த வருடத்தில் ஒருநாள் உணவு வழங்குவதற்கு முற்பதிவு செய்யுங்கள். அன்பளிப்பை 5 நாட்களுக்கு முன் தாருங்கள். இவ்வாறு நீங்கள் உதவி செய்தால் எமது பணியை சீராகச் செய்ய முடியும் என்பதோடு எமக்கும் ஓர் நம்பிக்கையும் உற்சாகமும் பிறக்கும்.

அந்தப் பிள்ளைகளுக்கும் தங்கள் வாழ்வு ஒளிமயமாக மாறுகின்றது என்ற எண்ணம் வரும். புலம் பெயர்ந்த மனிதாபிமானம் உள்ளவர்கள் - மனித நேயம் உள்ளவர்கள் இருக்கும் வரை நாம் அநாதைகள் அல்ல என்ற நம்பிக்கை அவர்களுக்கு வளரும். இந்த நம்பிக்கை தான் அவர்களது வாழ்க்கை.மேலதிக விபரங்களுக்கு: **ஈழநாடு பரமேஸ் 416 841 9600**

*கடந்த வாரம் உதவியவர்களின் நிகழ்வின் தொகுப்பு 23ம் பக்கத்தில் உள்ளது. விபரம் கீழேயுள்ளது.*

*11 ஜனவரி 2012:- அருண் ஆனந்த ராஜா (15வது பிறந்தநாள்) விக்கின ராஜா சுப்பிரமணியம் (24வது திதி)*

*12 ஜனவரி 2012:- சீரடிபாபா பூஜைக்காக திருமதி வசந்தி பரராசசிங்கம் அவர்களது பயணம்.*

*13 ஜனவரி 2012:- திருமதி தங்கம்மா திருநாவுக்கரசு அவர்களது முதலாவது ஆண்டுத் திதி.*

*14 ஜனவரி 2012:- தாயிகா கண்ணன் அவர்களது 21வது பிறந்தநாள்.*

*15 ஜனவரி 2012:- தைப்பொங்கல் உபயம் கிருஷாந் ரோஜன், மதுஷாந் ரோஜன் சகோதரர்கள்.*

*15 ஜனவரி 2012:- செல்வன் அஸ்வின் குபேரன் அவர்களது 5வது பிறந்த நாள்.*

*16 ஜனவரி 2012:- நகுலேஸ்வரன் பவீஸ்னன் அவர்களது 14வது பிறந்த நாள்*

*16 ஜனவரி 2012:- பரமேஸ்வரி அம்மா பத்மநாதமுதலி அவர்களது 2வது ஆண்டுத்திதி*

*17 ஜனவரி 2012:- அகிஷன் ரவீந்திரன் அவர்களது 10வது பிறந்தநாள்.*

*17 ஜனவரி 2012:- குப்பிளான் சிவா அவர்களது 55வது பிறந்தநாள்.*

*18 ஜனவரி 2012:- நிரோஷ் ஜெய காந்தன் அவர்களது 8வது பிறந்த நாள்.*

*19 ஜனவரி 2012:- மார்க்கண்டு புவனேஸ்வரி அவர்களது 8வது நினைவஞ்சலி.*

# அன்பு இல்லக் குழந்தைகளுக்கு உதவியவர்களின் நிகழ்வின் நிழற்படங்கள்














கடந்தவாரம் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு உணவு அளித்தோர் கவனத்திற்கு!

கடந்தவாரம் உங்கள் பெருங் கருணையினால் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு தினமும் சிறப்பு உணவு வழங்கப்பட்டது. உங்கள் அன்புக்குரியவர்களின் பிறந்தநாள், நினைவு நாள் என்பன சிறப்பான முறையில் அவர்களால் அனுஷ்டிக்கப்பட்டது. அதன் நிழற் படங்கள் ஒவ்வொரு வியாழக்கிழமை எமக்கு அனுப்பி வைக்கப்படுவது வழமை. அதேபோன்று இவ்வாரம் வியாழக் கிழமை ஒட்டுசுட்டான் நகரில் மின் விநியோகம் தடைப்பட்டமையால் அங்கிருந்து நிழற்படங்களைப் பெற முடியாமல் போய் விட்டது. அடுத்த வாரம் அவைகள் பிரசுரிக்கப்படும் என்பதை தாழ்மையோடு அறியத் தருகின்றோம்.


[illegible] கல்வி பெறும் பெண் [illegible]


[illegible]கக் கல்வி புகட்டும் ஆசிரியருடன் அன்பு இல்லக் குழந்தைகள்


அன்பு இல்லப் பிள்ளைகளை நலன் விசாரிக்கும் புலம்பெயர் உறவுகள்

Points Card ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

வாடிக்கையாளர் இலவசமாகப் பெற்றுக்கொள்ளவும்.




# GEMINI
# ஜெமினி

7200 MARKHAM ROAD (MARK

**எமது ஸ்தாபனத்தின் 15வது வருட பூர்த்தியை முன்னிட்டு**
**எமது வாடிக்கையாளருக்கு குலுக்கல் முறையில்**
**பரிசுகள் வழங்கப்படவுள்ளது!!**

முதலாம் பரிசு: 40" LCD HDTV



இரண்டாம் பரிசு: BluRay DVD Player



Fish Specials only on Friday, Saturday and Sunday

King Fish $2.99

கொடுவா $2.99 Lb

நீலக்கால் நண்டு $5.99 Lb

ஆட்டுக் குடல் $2.99 Lb

Mr. Spicy நல்லெண்ணெய்




Uruthira குத்தரிசி




ஜெமினி உழுத்தம் பருப்பு




Sangam பார்பொயில்ட் பசுமதி அரிசி




கப்பல் வாழைப்பழம்








GEMINI BUTTER CHILLI





உங்களோடு பேசுவது இதுவே இறுதியாக இருக்கலாம். பன்னெடுங் காலம் பழகிய நண்பனை சிறு கை குலுக்கலோடு பிரிவதைப் போல் என் இறுதிப் பகுதியை எழுதுகிறேன்.

மரணத்துக்கு சற்றும் குறைந்தது அல்ல மனதார நினைத்தவர்களைப் பிரிவது. என் மனப்பாரம் பகிரும் சுமை தாங்கிகளாகவே வாசகர்களைப் பார்க்கிறேன்.

இப்போது 'கயிறா... உயிரா?' என்கிற பட்டிமன்றத்தில் கடைசி உரை நிகழ்த்துபவனாக உங்களிடத்தில் நிற்கிறேன்.

எந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைகளில் தூக்குத் தண்டனை வழங்கக் கூடாது என்பதை எமக்கு எதிரான வழக்கின் தீர்ப்பிலேயே பக்கம் 157, 158-ல் நீதிபதி தோமஸ் அவர்களும் நீதிபதி குவாத்ரி அவர்களும் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

1. எதிரியின் வயது இளம் வயதாக இருந்தால் தூக்குத் தண்டனை தவிர்க்கப்பட வேண்டும்.

2. சமுதாயத்துக்கு தொடர் பயத்தை ஏற்படுத்தக்கூடிய மாதிரி எந்த வன்முறை நடவடிக்கையிலும் ஈடுபடமாட்டார் என்பதற்கான சாத்தியக்கூறு இருந்தால், தூக்குத் தண்டனையைத் தவிர்க்கலாம்.

3. இன்னொரு நபருடைய ஆதிக்கத்துக்கோ வலுக்கட்டாயத்துக்கோ ஆட்பட்டு அந்தக் குற்றச் செயலைச் செய்து இருந்தால் தூக்குத் தண்டனை தவிர்க்கப்பட வேண்டும்.




# கயிறே என் கதை கேள்!
# முருகனின் கண்ணீர் கதை -16

மேற்படி மூன்று சாதக காரணங்களும் இந்த வழக்கில் எனக்கும் நளினிக்கும் அப்படியே பொருந்துகின்றன. அந்தக் குற்றம் நடந்தபோது எனக்கு 20 வயது, நளினிக்கு 25 வயது. நீதிபதி வாத்வா அவர்கள் வழங்கிய தீர்ப்பில் 433, 434-ம் பக்கங்களில் 18, 23, 26 வயதுடைய மூவரை இளம் வயதினர் எனக் கருதி (அவர்கள் கையில் துப்பாக்கி வைத்து பலரை சுட்டுக் கொண்டு இருந்தபோதுகூட) விடுதலை செய்யப்பட்ட ஒரு பழைய உச்ச நீதிமன்ற தீர்ப்பை மேற்கோள் காட்டி உறுதிப்படுத்தி உள்ளார்.

இரண்டாவது கருத்தைப் பொறுத்த வரையில் எம்மால் எதிர்காலத்தில் இந்தச் சமுதாயத்துக்கு வன்முறை அச்சுறுத்தல் நிச்சயமாக ஏற்படாது. ராஜீவ் காந்தி தனிப்பட்ட விரோத உணர்ச்சி காரணமாகவே கொல்லப்பட்டார். அதில் நாம் ஈடுபடுத்தப்பட்டோம் என்பது தான் நீதிமன்றம் எடுத்த முடிவு.

ஒருவேளை நாம் குற்றவாளிகள் என்பது சரி என எடுத்துக் கொண்டாலும் நாம் திரும்ப அப்படி ஒரு தவறைச் செய்ய நிச்சயம் வாய்ப்பு இல்லை. மூன்றாவது காரணத்தைப் பொறுத்த அளவில் நானும் நளினியும் சிவராசனின் கோபத்துக்கும் எரிச்சலுக்கும் பயந்தோம். சிவராசன் எனக்கு மிகவும் மூத்த எல்.டி.டி.ஈ உறுப்பினர் எனக்கு ஒரு Commander ஆகவும் Boss ஆகவும் இருந்தார்.

சிவராசன் எனக்குக் கட்டளைகளை வழங்கினார். இவற்றை எல்லாம் நான் அல்ல, அரசுத் தரப்புச் சான்றுகளே சொல்கின்றன. மூன்று தருணங்களில் சிவராசனின் நடத்தையைப் பார்த்து நளினி பீதி அடைந்தார். நாம் சிவராசனை மறுத்துப் பேச முடியாத நிலையிலும் மனதில் எழும் சந்தேகத்தை வெளிப்படுத்தி உறுதிப்படுத்தவும் முடியாத நிலையில் இருந்தோம். இவ்வளவு இருந்தும் சிவராசனின் அதிகாரத்துக்கும் ஆதிக்கத்துக்கும் உட்பட்டு அவருடைய கட்டாயத்துக்குப் பயந்து அவர் சொன்னதை ஏன், எதற்கு என்று கேள்வி கேட்காது செய்தோம் என்று அரசு தரப்புச் சான்றுகள் சொல்கின்றன.

மரண தண்டனையைத் தடுக்க நீதிபதி குறிப்பிட்ட மூன்று காரணிகளும் எமக்குச் சாதகமாக இருந்தும், எமக்கான தண்டனை தளர்த்தப்படவில்லை.

நீதிபதிகள் தோமஸ் குவாத்ரி ஆகியோர் பக்கம் 156-ல் 'A3 முருகன் முதல் வகை நபர்களின் உத்தரவுகளை மட்டும் நிறைவேற்றவில்லை. அத்தோடு மற்றவர்களையும் அந்த உத்தரவுக்கு ஏற்ப வேலை செய்ய வைத்து குற்றமுறு சதியின் இறுதி இலக்கினை அடையச் செயல்பட்டார். அதனால் அவர் குற்றமுறு சதியாளர்களின் தலைமைத்துவ மட்டத்தினுள் (leadership layer among the conspiators) வந்து விடுகிறார்' என்று முடிவு செய்தனர். அதன் பேரில் தூக்குத் தண்டனையும் கொடுத்தனர்.

ராஜீவ்காந்தி கொலை தொடர்பாக ஏதாவது செய்யும்படி எனக்கு எவரேனும் உத்தரவு போட்டார்கள் என்பதற்கோ நான் யாருக்காவது உத்தரவு அல்லது பணிப்புரை வழங்கினேன் என்றோ அல்லது குறைந்தபட்சம் கேட்டுக் கொண்டேன் என்றாவது சான்று பகரக்கூடிய ஒரு வாசகத்தையாவது அரசுத் தரப்புச் சான்றுகள் சுட்டிக் காட்ட முடியுமா? நான் மறைமுகமாக அவ்வாறு உத்தரவு போட்டதாகக்கூட எவ்விதச் சான்றும் கிடையாது.

சிவராசன் என்னை நம்பவே இல்லை. என்னிடம் உண்மையைச் சொல்லக் கூடாது என்பதில் அவர் உறுதியாக இருந்தார். உண்மை தெரியக்கூடிய சூழ்நிலைகளில் இருந்து என்னைத் தவிர்க்க வேண்டும் என்பதில் அவர் மிகக் கவனமாக இருந்தார். இதற்கு அரசுத் தரப்பு சான்றுகளே உள்ளன. அப்படி இருந்தும் நீதிபதிகள் எப்படி என்னை அந்தத் தலைமைப் பட்டியலில் சேர்த்தார்கள் என்பதுதான் புதிராக இருக்கிறது.

ஒருவரை சாகடிக்க வேண்டும் என்று முடிவு செய்து விட்டால் அவரைத் தலைவராக்கினால் போதும் என நினைத்திருக்கிறார்கள். நான் யாருக்கும் உத்தரவு ஏதும் போடவில்லை என்பதற்கும் மற்றவர் உத்தரவுப்படி செயல்பட்டேன் என்றும் உறுதிப்படுத்தும் முடிவுகளின் வாசகங்களை நீதிபதி வாத்வா அவர்களின் தீர்ப்புப் பக்கங்கள் 106, 107, 141, 366, 368, 369 ஆகியவற்றில் யார் வேண்டுமானாலும் படித்துப் பார்க்கலாம்.

அடுத்து எமக்கு தூக்குத் தண்டனை கொடுப்பதற்குக் காட்டிய காரணங்களில் ஒன்று சம்பவ இடத்தில் ராஜீவ் காந்தி தவிர காவல் துறையினர் உட்பட மேலும் 17 பேர் இறந்தனர் என்பது. இரண்டு எதிரிகளுக்கு (A1A3) தனிப்பட்ட ரீதியில் ராஜீவ் காந்தி மீது வெறுப்பு ஏதும் இல்லாவிட்டாலும் அவர் இந்தியப் பிரதமராக இருந்து எடுத்த முடிவுக்காக கொல்லப்பட்டார் என்பது காரணமாக இருக்கலாம். இவை இரண்டுமே நீதிபதிகள் முதலில் எடுத்த முடிவுகளுக்கு முரண்பட்டு நிற்கின்றன. தீர்ப்பின் பக்கம் 29-ல் "ராஜீவ் காந்தியைத் தவிர வேறு ஒருவரைக்கூட கொல்ல குற்றமுறு சதியாளர்கள் விரும்பினார்கள் என்பதற்கு நிச்சயமாக எவ்வித சான்றும் கிடையாது" எனத் தெளிவாக சொல்லப்பட்டு இருக்கிறது.

மேலும் அரசு ஆவணம் 77-ன்படி "21.05.91 அன்று ஜெயகுமார் (யு10) வீட்டுக்குப் போன பிறகுதான் (பின் இரவு) சுபா அங்கு குண்டு வெடித்ததைப்பற்றி நளினியிடம் சொல்கிறார்.

இதுவரை நளினிக்கு குண்டுபற்றி எதுவும் தெரியாது. அங்கு பலர் இறந்ததும் நளினிக்குத் தெரியாது. குண்டுச் சத்தம் கேட்பதற்கு முன்பு வரை தணுவிடம் குண்டு இருந்தது என்பதுகூட நளினிக்குத் தெரியாது.

அதே போல் 25.5.91 அன்றுதான் தாணு வைத்திருந்து வெடிக்க வைத்த குண்டு பற்றி சிவராசன் முதன்முதலில் சொன்னதாக அரசு ஆவணம் 81-ல் எழுதப்பட்டு உள்ளது. அரசுத் தரப்புச் சான்றின்படியே எமக்குத் தெரிந்திராத, அதற்கு வாய்ப்பே இல்லாத இறப்புகளுக்கு எம்மை பொறுப்பாக்கித் தூக்குத் தண்டனை கொடுப்பது என்ன நீதி?

நீதிபதிகள் அளித்த தீர்ப்பின் பக்கம் 30-ல் "அந்த குண்டு வெடிப்பதால் உயிர் இழப்பு ஏற்பட வாய்ப்பு உண்டு என்பது சிவராசனுக்கும் அவரது உயர் மட்டத் தலைவர்களுக்கும் தெரிந்து இருக்கலாம். ஆனால் அதனைக் கொண்டு அவர்கள் வேறு நபர்களை கொல்லக் கருதி இருந்தார்கள் எனக் கருத முடியாது!" எனச் சொல்லி இருக்கிறார்கள். எமக்கான தீர்ப்பின்போது மட்டும் இந்த வரிகள் மறந்து போனது ஏனோ?

இதே நீதிபதிகள் 28, 29-ம் பக்கத் தீர்ப்புகளில் "ராஜீவ் காந்தி மீது இருந்த தனிப்பட்ட விரோதத்தின் காரணமாகவே அவர் கொல்லப்பட்டார். அவர் திரும்பவும் பதவிக்கு வந்தால் தமக்கு ஆபத்து என்று கருதியதும் அதற்குக் காரணம்" என்பதாக முடிவு செய்யப்பட்டு உள்ளது. இலங்கைக்கு இந்திய இராணுவத்தை அனுப்பியதற்கு தனிப்பட்ட ராஜீவ் காந்தி மட்டும் காரணம் அல்ல. அது அந்த அரசின் முடிவு. அந்த அரசின் பிரதம மந்திரியாக ராஜீவ் காந்தி இருந்தார் என்பதால் அவர்தான் அனுப்பினார். அவர் மட்டும் தான் அதற்குப் பொறுப்பு என்று சொல்வது எப்படி உண்மையாகும்?

அடுத்து தடா சட்டத்தில் ஒரு வழக்கை விசாரணை செய்கிறபோது, அந்த சட்டத்தின் கீழ் வருகிற குற்றங்களுடன் மற்ற சட்டங்களுக்குக் கீழ் வருகிற குற்றங்களும் செய்ததாகத் தெரிந்தால் அவற்றையும் சேர்த்து சிறப்பு நீதிமன்றம் விசாரிக்கலாம். தடா சட்டத்துக்கு கீழ் வருகிற குற்றங்களுக்குத் தண்டனை கொடுக்கிற போது மற்றைய சட்டங்களுக்கு கீழ் வருகிற குற்றங்களுக்கும் சேர்த்து அதே சிறப்பு நீதிமன்றம் தண்டனை கொடுக்கலாம். ஆனால், அந்தக் குற்றங்கள் தடா சட்டத்தின் கீழ் வருகிற குற்றங்களுடன் கண்டிப்பாகத் தொடர்பு இருந்திருக்க வேண்டும். இதனைத் தான் 12(1) பிரிவின் ' If the offence (under the TADA Act) is connected with such other offence (under other laws) சொற்றொடர் வலியுறுத்துகிறது. ஆனால் இங்கு அந்த சொற்றொடர் கருத்தில் கொள்ளப்படாது விடப்பட்டுள்ளது.

இந்த வழக்கு விசாரணை நீதிமன்றத்தில் (Trial court) தடா சட்டத்தின் கீழ் விசாரிக்கப்பட்ட ஒரே காரணத்தினால் அதே சட்டப் பிரிவு 12-ன் உதவியுடன் பிரிவு 15-ன் கீழ் தயார் செய்யப்பட்ட ஒப்புதல் வாக்குமூலங்களைப் பயன்படுத்தலாம் என்று உச்ச நீதிமன்றம் முடிவெடுத்தது. பிரிவு 12-ல் விசாரிப்பது பற்றியும் தண்டனை கொடுப்பது பற்றியும் மட்டும்தான் உள்ளது. அதில் 14-வது பிரிவைப் பற்றியோ ஒப்புதல் வாக்குமூலங்களை அல்லது சான்றுகளைப் பயன்படுத்துவது பற்றியோ எவ்விதக் குறிப்பும் வாசகமும் இல்லை.

15-வது பிரிவின் கீழ் பதிவு செய்யப்படும் ஒப்புதல் வாக்குமூலங்கள் சான்றுகளாக எப்படி ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்பது பற்றி இதே 15-வது பிரிவிலும் 21-வது விதியிலும் தெளிவாக வெளிப்படையாக சொல்லப்பட்டு உள்ளது. ஆனால் வற்புறுத்தியும் பொய்யாகத் திரித்தும் கற்பனையாகக் கடைவிரிக்கப்பட்டும் உருவான ஒப்புதல் வாக்குமூலங்களை வைத்தே எங்களுக்கான தீர்ப்பு எழுதப்பட்டது எந்த விதத்தில் நியாயம்? தடா சட்டம் நீக்கப்பட்ட பிறகும் அந்தச் சட்டத்தின்படி சுமத்தப்பட்ட குற்றங்களை நீக்காமல் இருப்பது நியாயமா?

எனக்கு இந்திய சட்டங்களைப் பற்றிப் பெரிதாக எதுவும் தெரியாது. ஆனால் இன்றைக்கு ராஜீவ் கொலை வழக்கு குறித்த அத்தனை சட்டக் குறிப்புகளையும் தூக்கத்தில் எழுப்பிக் கேட்டால் கூட சொல்கிற அளவுக்குத் தெளிவாக இருக்கிறேன். சட்டத்தை எப்படி எல்லாம் வலையாக்கி எங்களை வளைத்து இருக்கிறார்கள் என்பதை விளக்கவே இவ்வளவு விபரமாக உங்களுக்கு சொல்கிறேன்.

வழக்கு விசாரணை நடந்த விதம், அதில் அடுக்கடுக்காக ஏற்பட்ட குளறுபடிகள், இழைக்கப்பட்ட கொடுமைகள், சித்திரிப்புகள், கொலைச் சதி அறியாத எங்களின் தவிப்புகள் என இத்தனை நாட்களாய் எங்கள் இதயத்தில் சுமையாக வருத்திய அத்தனை விஷயங்களையும் உங்களிடத்தில் இறக்கி வைத்திருக்கிறேன்.

சுமந்த சித்திரவதைகளில் நான் பகிர்ந்தது 10 சதவீதம் தான். ஆனால் அதைப் படித்து விட்டே "அப்பா, நீங்கள் இப்படி எல்லாம் சிரமப்பட்டீங்களா? ஜூ.வி. படிக்கிறப்ப எல்லாம் அழுதிடுறேன்பா..." எனக் கடிதம் எழுதி இருக்கிறாள் என் செல்ல மகள் ஆரித்ரா. கடைசி ஆசையாய் அவளைப் பார்த்து விட என் மனம் துடிக்கிறது. மரண மேகம் விலகுவதும் சூழ்வதுமாக விளையாடும் நிலை பொறுக்காமல் இந்தியா வந்து என்னைச் சந்திக்க லண்டனில் இருந்தபடி விசா கேட்டிருக்கிறாள் ஆரித்ரா. ஆனால், விசா கிடைக்கவில்லை. அப்பன் – மகள் பாசம் எல்லாம் அரசாங்கத்துக்குத் தெரியுமா என்ன? (30ம் பக்கம் பார்க்க)

# ஒவ்வொரு மண் துணிக்கையிலும் குருதியின் மணம்

கண்ணி வெடிகளை விதைப்பதும் பிறகு அவற்றை அகற்றுவதும் அபாயங்கள் நிறைந்த ஒரு செயலே. அதிலும் யுத்தத்துக்குப் பிறகு கண்ணி வெடிகளாலும் மிதிவெடிகளாலும் சனங்களுக்கு ஏற்படுகின்ற இன்னல்களும் ஆபத்துகளும் மிக அதிகம்.

உலகம் முழுவதும் கண்ணிவெடிகளைப் பாவிப்பது தடைசெய்யப்பட்டுள்ள போதும் யுத்தத்தில் ஈடுபடும் தரப்புகள் கண்ணிவெடிகளைப் பயன்படுத்தியே வருகின்றன.

ஈழப்போரின் ஆரம்பமே கண்ணி வெடிகளுடன் தான் தொடங்கியது. இப்பொழுது போர் முடிந்த பிறகு கண்ணி வெடிகளை அகற்றும் பணிகள் நடந்து வருகின்றன. ஆகவே கண்ணிவெடிகளுடன் தான் அதனுடைய முடிவும் அமைகிறது.

ஆனாலும் இது கடினமான பணி. அதேவேளை இன்னும் கண்ணி வெடிகளால் ஏற்படும் பாதிப்புகள் தொடர்ந்து கொண்டேயிருக்கின்றன. சவால்களும் அபாயங்களும் நிறைந்த இந்தப் பணியில் ஆயிரக்கணக்கான பணியாளர்கள் இலங்கையின் வடக்குக் கிழக்குப் பகுதிகளில் ஈடுபட்டு வருகிறார்கள். இந்த பகுதியில் எங்களுடன் உரையாடியவர் விடுதலைப்புலிகளின் முன்னாள் உறுப்பினர் ஒருவர். இவர் தற்போது கண்ணிவெடி அகற்றும் பிரிவொன்றில் பணியாற்றுகிறார்.

**கண்ணிவெடிகளையும் மிதிவெடிகளையும் அகற்றும்போது என்ன வகையான பிரச்சினைகளைச் சந்திக்கிறீர்கள்?**

நாங்கள் வேலை செய்கிற பகுதிகள் எல்லாம் ஒரே மாதிரி இருப்பதில்லை. போர், சண்டை எங்கே எல்லாம் நடந்ததோ அங்கே எல்லாம் கண்ணி வெடிப் பிரச்சினை இருக்க வாய்ப்புண்டு. சில இடங்களில் அந்த வாய்ப்பில்லாமல் இருக்கிறதும் உண்டு.

ஆனால் பொதுவாக கடற்கரையோரங்கள், வயல்வெளிகள், தென்னந்தோப்புகள், மணல்வெளிகள், காடுகள், ஆற்றுப்பகுதி, கடை மற்றும் கிராமங்கள், சந்திகள், பாடசாலை போன்ற பொது இடங்கள் என எல்லா இடத்திலும் இருந்தப் பிரச்சினை இருக்கும்.

ஒரு தரப்பு தன்னுடைய எதிர்த்தரப்புக்கு என்ன மாதிரியெல்லாம் தடைகளை ஏற்படுத்த முடியுமோ எவ்வளவுக்கெவ்வளவு சேதங்களை ஏற்படுத்த முடியுமோ அந்தளவுக்கு மிதிவெடிகளையும் கண்ணிவெடிகளையும் புதைக்கும்.

ஆகவே எதிர்பார்க்க முடியாத இடங்களில் எல்லாம் மிதிவெடிகளை வைத்தாற்தான் அதிலே வந்து மற்றத்தரப்பு எதிர்த்தரப்புச் சிக்கும். அதே வேளை எதிர்த்தரப்பானது நிச்சயமாக அந்த இடத்துக்கு வரும் அல்லது அந்த இடத்துக்கு வந்தே ஆக வேணும் என்ற ஒரு கணிப்பை வைத்துத் தான் பெரும்பாலான மிதிவெடிகள் வைக்கப்படும். கிணற்றடி மறைந்து நிற்கக்கூடிய மரங்களுக்கு அருகில் முக்கியமான பாதைகள், திருப்பங்கள் என்ற மாதிரி.

எனவே தான், இந்த மாதிரியான இடங்களில் புழங்கும் போது மிக அவதானமாக இருங்கள் என்று நாங்கள் பொதுமக்களை அறிவுறுத்தியிருக்கிறம். நாங்கள் கண்ணி வெடிகளையும் மிதிவெடிகளையும் அகற்றும்போதும் இந்த மாதிரியான இடங்களை விசேட கவனமெடுத்துத் தான் ஆராய்கிறோம்.

ஆனால் நீங்கள் கேட்பதைப் போலப் பிரச்சினைகள் ஏதுமிருக்கென்றால் இப்ப காட்டுப்பகுதியில் மிதிவெடிகளை அகற்றுவது பெரிய சிரமமான காரியம். காலம் செல்லச் செல்ல மரங்களும் செடிகளும் நன்றாக வளர்ந்து விடும். புதிய பற்றைகளும் வளர்ந்திடும். இந்த நிலையில் துப்புரவைச் செய்கிறது என்றால் அது பெரிய கரைச்சல் தான்.

பொதுவாகவே ஆட்கள் இல்லாத இடங்களில் ஒரு வருசத்திலேயே மரங்களும் செடிகளும் வளர்ந்து காடாகி விடும். இப்ப நாங்கள் வேலைசெய்கிற – கண்ணிவெடி-களை அகற்றுகிற – இடங்களில் எல்லாம் பற்றைகள் தான். அந்தப்



பற்றைகளை வெட்டி வெட்டித்தான் வேலை செய்ய வேண்டியுள்ளது. இதில் முள்ளுப்பற்றைகள் இருக்கிற இடத்தில் வேலை செய்கிறது மிகக் கஸ்ரம். ஆனால் என்ன செய்ய முடியும்? முள் என்பதற்காக கஸ்ரம் என்பதற்காக எல்லாம் அந்த இடங்களை ஒதுக்கி விட முடியாது.

இதை விடப் பிரச்சினை என்னவென்றால் ஆற்றுப்பகுதிகளில் மிதிவெடிகளை அகற்றுவது தான். மழைபெய்யும் போது ஏற்படுகிற வெள்ளப்பெருக்கு, புதைக்கப்பட்டிருக்கிற வெடிப்பொருட்களை வேறு இடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விடும். இது தான் ஆபத்து.

ஆற்றுவெள்ளத்தில் மிதக்கிற வெடிப்பொருட்கள் மிதந்து கொண்டுபோய், வேற இன்னொரு இடத்தில் தேங்கி விடும். அல்லது நாங்கள் ஏற்கனவே துப்புரவு செய்த இடங்களில் போய்ச் சேர்ந்து விடும்.

வன்னியில் ஆறுகள் அதிகம். சண்டை நடந்த பெரும்பாலான பகுதிகள், காடுகளும் ஆற்றுப்பகுதிகளும் தான். அதனால் இந்தப் பிரச்சினை அதிகம். இதனால் முக்கியமாக வயற்புறங்களிலும் குளங்களிலும் மிதிவெடிப் பிரச்சினை அதிகமாக உள்ளது.

ஆறுகளில் இருந்தே குளங்களுக்குத் தண்ணீர் வாறது என்ற படியால், பெரிய குளங்களில் மிதிவெடிப்பிரச்சினை இருக்கு. குளங்களுக்குள் நாங்கள் மிதிவெடிகளை ஆராய முடியாது. ஆகவே நீண்ட கால அடிப்படையில் இந்தப்பிரச்சினை இருக்கும் என நம்புகிறேன். ஆனால் குளங்களைப் புனரமைக்கும் போது சற்று எச்சரிக்கையான முறையில் அதைச் செய்ய வேணும். ஆனாலும் முடிந்தவரையில் இந்த மாதிரியான பிரச்சினைகள் வராதமுறையில் தான் நாங்கள் வேலை செய்கிறம்.

**காடுகளை இலகுவாக அழித்து இலகுவாக நீங்கள் வேலை செய்யக்கூடிய மாதிரியான கருவிகள் அல்லது பொருத்தமான சாதனங்கள் ஏதும் உங்களுக்குத் தரப்படவில்லையா?**

எங்களிடம் சில உபகரணங்கள் இருக்கின்றன. மிக மோசமான காடுகளும் மிதிவெடிப் பிரச்சினையும் இருக்கும் பகுதி என்று இனங்காணப்படும் பகுதிகளில் தானியங்கி இயந்திரங்களில் துணையைக் கொண்டு முதற் கட்ட வெடிப்பொருட்களை அகற்றி காடுகளையும் துப்புரவாக்கி விடுவோம். சில இடங்களில் இந்தத் தானியங்கி இயந்திரங்களை வைத்து இயக்க முடியாத பிரச்சினை இருக்கும். இடவசதி போதாது. அல்லது அந்தப் பகுதிக்கு இந்த இயந்திரங்களைக் கொண்டு போக முடியாது.

இந்த மாதிரியான இடங்களில் நாங்கள் தான் மெல்லமெல்ல manual முறையில் மரஞ்செடிகளையும் அகற்றி வெடிப்பொருட்களையும் மீட்டெடுக்க வேணும்.



**நீங்கள் இப்படி வேலை செய்யும் போது சந்திக்கின்ற உணர்வுகள், மறக்கவே முடியாத சம்பங்கள், அனுபவங்கள் எப்படியானவை?**

நாங்கள் போனமாதம் வன்னேரிக்குளத்தை அண்மித்த பகுதிகளில் வெடிப்பொருட்களை அகற்றிக் கொண்டிருந்தோம். அப்ப நல்ல மழை நேரம். நிலமெல்லாம் ஊறியிருந்தது. இது எங்களுக்குச் சில வசதிகளைச் செய்திருந்தது. நிலத்தைத் தோண்டுவதற்கு மண் ஈரமாக இருந்தால் வசதியாக இருக்கும். ஆனால் மழை தொடர்ந்து பெய்து கொண்டிருந்தால் வேலை செய்கிறது கடினம்.

அப்ப மழை ஈரத்தோடு நாங்கள் வேலை செய்து கொண்டிருக்கும் போது எதிர்பாராமல் ஒரு இடத்தில் நாங்கள் ஒரு குழியைச் சந்தித்தோம். மண் சொதசொதப்பாக இருந்த அந்த இடத்தில் மிக அவதானமாக அகழ்ந்து பார்த்தால் அதுக்குள்ளே எலும்புக்கூடுகள். மனித எலும்புகள். இதைப்பற்றி எங்களின் மேற்பார்வையாளர்களுக்கு அறிவித்தோம். பிறகு அவர்களுடைய அனுமதியின்படி அப்படியே மெல்ல அகழ்ந்து கொண்டு போனால் மூன்று எலும்புக்கூடுகள் இருந்தன.

மூன்றும் படையினருடையவை. அந்த எலும்புக்கூடுகளில் இருந்த தகட்டு இலக்கங்களையும் பிற உக்கிய நிலையில் இருந்த சீருடைகளை வைத்தும் இதைக் கண்டு பிடித்தோம். பின்னர் அந்தப் பிரதேச இராணுவத்தினர் வந்து அவற்றைப் பார்த்து எலும்புக்கூடுகளை எடுத்துச் சென்றார்கள். எங்களிடம் விவரத்தைக் கேட்டறிந்தார்கள். அந்தச் சண்டையில் இரண்டு தரப்புக்கும் அப்ப கடுமையான சேதங்கள் ஏற்பட்டிருந்தன. பிறகு அந்த இடத்தைப் படையினர் கைப்பற்றியிருந்தாலும் அது காட்டுப்பகுதி என்றபடியால் அவர்கள் கைவிட்ட சடலங்களை எடுக்க முடியவில்லைப் போல.

மற்றது சண்டையின் உக்கிரத்தில் படைகள் முன்னேற முடியாத ஒரு நிலையில் – இறுக்கமான சண்டைக்கு முகங்கொடுப்பதில் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். அப்படியான கட்டத்தில் விநியோகமும் மீட்பு நடவடிக்கைகளும் சவாலாக இருந்திருக்கின்றன. இதனால் இறந்து போனவர்களின் சடலங்களைப் புதைத்திருக்கிறார்கள். இல்லையென்றால் அவை நாற்றமெடுக்கும்.

நிலை கொண்டிருக்கும் படையினர் அந்தப் பிண நாற்றத்துக்குள் நிற்பது பெரும் மன உளைச்சலைக் கொடுக்கும். நாளைக்குத் தங்களுடைய உடலும் அப்படித் தானே மீட்கப்படாத (39ம் பக்கம் பார்க்க)

# அப்துல் கலாமும் யாழ்ப்பாணமும்

(13ம் பக்கத் தொடர்ச்சி) இடையே உள்ள கடைகள் பல கொண்ட நெடுங் கிடங்கு இராமேச்சரம் கோயிலுக் குரியது என்பைத நான் நெடுங்கால மாக அறிவேன். அங்குள்ள நகைக் கடையினரிடம் ஏனைய கடைகளிலும் வாடைக வருவாய் திரட்டித் தருமாறு கேட்ட கடித விவரங்களை எனக்கு அலுவலர்கள் காட்டினர். இருபாலை யிலும் வடமராட்சியிலும் உள்ள இராமேச்சரம் கோயில் சொத்து விவர ங்களைக் கூறினர்.

நெடுந்தீவில் இராமேச்சரம் கோயிலுக் காககப் பசுக் கோட்டம் உள்ளைதயும் கோயில் முழுக்குக்குப் பால் அங்கிரு ந்து வந்த வரலாற்றுக் காலங்களையும் நினைவூட்டினேன். அவர்கள் அலுவலர் கள். வரலாற்றாசிரியர்கள் அல்லர் என்ப தைத் தெரிந்தேன். வேறு இடங்களில் இருந்து பணிக்காக இரமேச்சரத்துக்கு மாற்றலாகி வந்தவர்கள். எதையும் தெரிந்து வைத்திருக்கவில்லை.

தமிழ்க்குடிமகன் இந்து அறநிலையத் துறை அமைச்சராக இருந்த காலத் தில் யாழ்ப்பாணத்தில் உள்ள இரா மேச்சரக் கோயில் சொத்துகளை விற்றுவிடவேண்டுமென இராமேச்சரம் கோயிலார் தீர்மானித்த செய்தியை இதழ் களில் படித்தேன். நேரே அமைச்சரிடம் சென்றேன். அவரும் நானும் பச்சையப் பன் கல்லூரியில் 1965இல் ஒருசாலை மாணாக்கர். யாழ்ப்பாண - இராமேச் சரத் தொடர்புகளை அறுத்து விடாதீர் கள். யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையினரைக் கேட்டால் அச்சொத்து களின் வருவாயைப் பெற்றுத் தருவர் எனக் கூறியதுடன், அமைச்சருக்குக் கொடுத்த விண்ணப்பத்தின் படிகளை அகில இலங்கை இந்து மாமன்றத் துக்கும் யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபைக்கும் அனுப்பிவைத்தேன். என் வேண்டுகோளை ஏற்ற அமைச்சர், அந்த விற்பனை முயற்சியைத் தடுத்து விட்டார்.

யாழ்ப்பாணத்துக்கு வரும் அப்துல் கலாமிடம் கனகசுந்தரத்தாரின் நினைவு களைக் கேட்டுத் தெரிந்து கொள்வது அங்குள்ளோரின் கடன்.

அப்துல் கலாமின் உறவுகள் மன்னாரி லும் அநுராதபுரத்திலும் வாழ்ந்து கொண்டிருக்கும் செய்திகளையும் இராமேச்சரத்தில் அப்துல் கலாமின் அண்ணர் என்னிடம் தெரிவித்தார். இராமேச்சர - யாழ்ப்பாணத்தின் வர லாற்றுத் தொடர்புகளைப் புதுப்பிக்க அப்துல் கலாமின் யாழ்ப்பாண வருகை பயன்படுமாயின் மகிழ்வேன்.

# கயிறே என் கதை கேள்!

(27ம் பக்கத் தொடர்ச்சி) நீதிமன்ற த்தில் அடுத்தபடியாய் எங்களின் தூக்குக்கு நாள் அறிவிக்கப்படலாம், ஒருவேளை உண்மைக்கு வெற்றி கிடைத்து எங்களுக்கான தூக்கை ரத்து செய்யும் நாளும் வாலாம். 'விடிவா மடிவா?' என்கிற வினா வின் நீட்சியில் எங்களின் வாழ்க்கை இன்னும் எத்தனை நாளைக்கு நீடி க்கப் போகிறதோ? இந்தச் சிறு இடைவெளியில் என் தரப்பு நியாய த்தைச் சொல்ல இடம் அளித்த ஜூ.வி-யை நன்றியோடு நினைக் கிறேன்.

ஒருவேளை மரணம் தவிர்க்க முடி யாததாக எங்களைச் சூழ்ந்தாலும் உள் ளத்து உண்மைகளை உங்களிடம் இறக்கி வைத்த திருப்தியில் என் உயிர் சற்று நிறைவோடு கயிறேறும்!

காயங்கள் எழுத்தில் ஆறியது! எண் ணத்தில் ஆறாது! (நன்றி:-ஜூனியர் விகடன்)

# பொருளாதாரச் சுமையால் கஷ்....

6ம் பக்கத் தொடர்ச்சி) அப்படியான ஒரு கேள்வியைத்தான் 'எத்தன்' என்ற படத்திலும் கேட்கிறார், விமல். கடனி லேயே நாடும் மக்களும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், வாழ வேண்டி யிருக்கிறது என்பதை மிகச் சுவாரஷ்ய மாகச் சொல்லும் படம் இது. ஆனால் படத்தைச் சுவாரஷ்யமாகப் பார்ப்பதைப் போல வாழ்க்கை இருப்பதில்லை. சேமிப்பையே தங்கள் வாழ்வாகக் கொண்டிருந்த ஒரு நிலை பெயர்ந் துள்ளதைப் போலவே தமிழர்களின் அடையாளங்களாக இருந்த பல சிறப்பம்சங்களும் போரினால் பெயர்ந்தும் சிதைந்தும் விட்டன. இவற்றை மீளு ருச் செய்யும் காலம் எப்போது எந்த வடிவில் வருமோ!

# எதற்கெடுத்தாலும் புலிப் பூச்சாண்டி

(11ம் பக்கத் தொடர்ச்சி) தப்பித்து விட முடியாது. அந்த ஆயுதப்போராட்டம் தோற்றம் பெற்றதற்கான காரணங்களை ஆராய்ந்து, அதற்குத் தீர்வு கண்டி ருக்க வேண்டும்.

ஜேவிபி கிளர்ச்சி தோற்கடிக்கப்பட்டு கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கு பின் னர் தான் மீண்டும் அதுபற்றிய அச்சம் வந்துள்ளது. ஆனால் விடுதலைப் புலிகள் தோற்கடிக்கப்பட்ட மூன்றே யாண்டுகளில் இப்படியான அச்சம் வந்துள்ளது. இதிலிருந்து ஆயுதப் போராட்டங்களைப் படை பலத்தின் மூலம் அழிப்பதற்கு முன்னுரிமை கொடுத்த அரசாங்கம் அந்த ஆயுதப் போராட்டங்களுக்கான அடிப்படைக் காரணங்களைக் கண்டிறிந்து அவற்றுக்குத் தீர்வு காணத் தவறி விட்டது என்பதை விளங்கிக் கொள்ள முடியும். இது அரசுக்குப் புரிந்திருக் கிறது, அதனால் தான் மீண்டும் ஆயுதப்போராட்டம் முளைகொள்ளுமோ என்று மிரள்கிறது.

எந்தவொரு ஆயுதப்போராட்டத்துக்கும் ஆயுதவழியில் தீர்வு காணமுடியாது. அதற்கான அடிப்படைக் காரணங்களு க்கு தீர்வு காணவேண்டும். அப்படித் தீர்வு காணத் தவறினால் குறிக்கப்பட்ட கால இடைவெளிக்குள் மீண்டும் அதே ஆயுதவழிப் போராட்டம் தலைதூக்கும் என்பதே உலக வரலாறு. இந்தப் பாடத்தை அமெரிக்கா அடிக்கடி படிப் பித்தாலும் அது அரசின் தலைக்குள் ஏனோ ஏறுவதாகத் தெரியவில்லை.

# வாசகர்களின் கவனத்திற்கு!

**உங்கள் குழந்தைகளின் பிறந்தநாள், திருமண நன்நாள், பெற்றோர் களின் பிறந்தநாள், அரங்கேற்ற நிகழ்வு நாள் மற்றும் உங்கள் அன்புக் குரியவர்களிள் துயர்பகிர்வு (மரண அறிவித்தல்) நினைவஞ்சலிகள் என்பவற்றை எமது ஈழநாடு பத்திரிகையில் பிரசுரித்தால் உங்கள் அன்பு க்குரியவர்களின் பெயரால் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு ஒரு வேளை உணவு வழங்கப்படும். அதற்கான ஆதாரங்கள் பத்திரிகையில் பிரசுரமாகும். மேலதிக கட்டணம் அறிவிடப்பட மாட்டாது. உங்களுக்கும் கோடி புண்ணியம் தேடி வரும்! குழந்தைகளுக்கும் பசிப்பிணி போகும்! மேலதிக விபரங்களுக்கு: ஈழநாடு பரமேஸ் 416 841 9600**

# கொஞ்சம் முத்தம் கொஞ்சம் அரவணைப்பு ஆண்களின் விருப்பம்



தாம்பத்ய உறவை விட முத்தமும் அரவணைப்பும் கட்டி தழுவுதல்களும் தான் ஆண்களின் முக்கிய விருப்பமாக இருப்பதாக ஆய்வு ஒன்றில் தெரிய வந்துள்ளது. அதற்கு நேர்மாறக செக்ஸ் உறவில் பெண்கள் அதிக ஆர்வமுடன் இருப்பது கண்டறியப்பட்டுள்ளது.

தாம்பத்ய உறவுக்கு ஆண்கள் தான் அதிக ஈடுபாடு கொண்டவர்களாக இருப்பார்கள் என்று அனைவரும் நம்பிக் கொண்டுள்ளனர். ஆணின் ஸ்பரிசத்தையும் அரவணைப்பை மட்டுமே பெண்கள் அதிகம் விரும்புவார்கள் என்று இதுவரை எண்ணப்பட்டு வந்தது. இந்த எண்ணத்தை தவிடு பொடியாக்கும் வகையில் அதிரடியான ஆய்வு முடிவு சமீபத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

ஐம்பது ஆண்டு காலம் இணைந்து வாழும் 5 நாடுகளைச் சேர்ந்த ஆயிரம் தம்பதியரிடம் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. 25 ஆண்டுகளாக தாம்பத்ய உறவில் ஈடுபட்ட தம்பதியரில் பெரும்பான்மையான ஆண்கள் பலரும் முத்தமிடுவதையும் கட்டித் தழுவுவதையும் அதிகம் விரும்புவதாக தெரிவித்துள்ளனர்.

40 முதல் 70 வயதுடைய தம்பதியரிடம் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது அதில் பல ஆண்கள் தம்முடைய துணையுடன் உறவில் ஈடுபடுவதை விட முத்தமிடுவதையும் அரவணைப்பையுமே விரும்புவதாக கூறியுள்ளனர்.

செக்ஸில் ஆண்களுக்கு எது அதிகம் பிடிக்கிறது என்ற கேள்விக்கு நிறைய முத்தமும் கட்டிப் பிடிப்புகளும் தான் என்று பெரும்பாலான ஆண்களிடமிருந்து தகவல் கிடைத்துள்ளது. அடிக்கடி தங்களை மனைவியர் கட்டிப் பிடிப்பது மிகவும் பிடித்துள்ளதாக அவர்கள் கூறியுள்ளனர்.

பெண்களைப் பொறுத்தவரை அதிக அளவிலான செக்ஸ் உறவையே தங்களது பார்ட்னர்களிடமிருந்து எதிர்பார்க்கிறார்களாம். திருமணமாகி 15 ஆண்டுகளைப் பூர்த்தி செய்துவிட்ட பெண்களுக்கு செக்ஸ் உறவு குறித்த நல்ல அறிவும் ஞானமும் ஏற்படுகிறதாம். இந்த விஷயத்தில் ஆண்களை விட பெண்களுக்குத்தான் செக்ஸ் குறித்த முழுமையான ஞானம் இருப்பதாக தகவல் கூறுகிறது.

என்ன தான் கட்டிப்பிடிப்புகளும் முத்தங்களும் அதிகம் பிடித்தமானவையாக இருப்பதாக ஆண்கள் கூறினாலும் கூட செக்ஸ் உறவுகளுக்கும் 20 சதவிகிதம் பேர் முக்கியத்துவம் தருகிறார்களாம். ஆணும் சரி, பெண்ணும் சரி செக்ஸ் உறவு என்பது நிம்மதியான மகிழ்ச்சியைத் தரும் அனுபவமாக அது இருப்பதாக பொதுவான கருத்தைத் தெரிவித்துள்ளனர்.

இந்த ஆய்வு இந்தியாவில் நடத்தப்படவில்லை. எனவே இந்தியர்களின் மன நிலை குறித்த அளவீடாக இதை எடுத்துக் கொள்ள முடியாது. இந்தியப் பெண்கள் பெரும்பான்மையோர் கணவனிடம் இருந்து எதிர்பார்ப்பது சின்னச் சின்ன முத்தங்கள் அன்பான கட்டித் தழுவல்களும் தான் என்றால் மிகையாகாது.

# கட்டிப் பிடிப்பதனால் மன அழுத்தம் குறையும்

வாழ்க்கைத் துணையை அடிக்கடி கட்டிப்பிடிப்பதால் மன அழுத்தம் குறையும் என்று ஆய்வில் தெரிய வந்துள்ளது.



சுவிட்சர்லாந்து நாட்டில் உள்ள ஜூரிச் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் பீட் டிட்சன் தலைமையிலான குழுவினர் சமீபத்தில் 51 ஜோடிகளிடம் மன அழுத்தம் குறித்து ஆராய்ச்சி செய்தனர்.

இந்த ஜோடிகளில் பெரும்பாலோர் திருமணமானவர்கள். இவர்களிடம் ஒரு வாரம் நடத்தப்பட்ட ஆராய்ச்சி முடிவுகள் குறித்து பீட் டிட்சன் கூறியதாவது:

நெருக்கமாக இல்லாமல் இருக்கும் ஜோடிகளை விட நெருக்கமாக பழகி அடிக்கடி கை குலுக்குவது கட்டிப்பிடிப்பது மற்றும் உடலுறவு கொண்ட ஜோடிகளிடம் மன அழுத்தம் குறைந்திருந்தது.

இவர்களிடம் மன அழுத்தத்துக்கு காரணமான கார்டிசால் என்ற ஹார்மோன் குறைவான அளவிலேயே சுரப்பது தெரிய வந்தது. மன அழுத்தம் காரணமாக பல பிரச்னைகள் ஏற்பட்டதாகக் கூறிய ஜோடிகள், நெருக்கமாக இருக்கத் தொடங்கிய பிறகு மன அழுத்தம் குறைந்ததாகக் கூறினர்.

அதே நேரம் மன அழுத்தத்தை குறைப்பதற்காக ஜோடிகள் போட்டி போட்டுக் கொண்டு நெருக்கம் காட்டக் கூடாது. இருவரும் மனம் ஒருமித்து நெருக்கமாக இருக்க வேண்டும். நெருக்கம் என்பது ஒவ்வொரு ஜோடிக்கும் மாறுபடும். தினசரி வாழ்க்கையில் குறிப்பிட்ட வகையில்தான் நெருக்கத்தை காட்ட வேண்டும் என்று அர்த்தமல்ல. இவ்வாறு பீட் டிட்சன் கூறினார்.

# இந்தியாவின் புரிதலும் தமிழர்களின் நம்பிக்கையின்மையும்

(9ம் பக்கத் தொடர்ச்சி) பாதுகாப்புச் செயலர்கோத்தபாய ராஜபக்ஷவும் வேறு பலரும் தெரிவித்திருந்ததையும் நாம் கவனிக்க வேணும்.

இலங்கையின் இனப்பிரச்சினை விசயத்தில் யார் என்ன சொன்னாலும் இந்தியா தனக்கென்று வகுத்துக் கொள்ளும் கொள்கையின் அடிப்படையில் மட்டுமே செயற்பட்டு வருகிறது. அதற்கேற்பவே அது நகர்வுகளை மேற்கொண்டு வருகிறது. இது துலக்கமான உண்மை.

இந்த உண்மைக்கு அப்பால் யாரும் அதன்மீது கண்டனங்களை வைப்பதும் பாராட்டுவதும் குற்றம்சாட்டுவதும் எதிர்பார்ப்புகளைக் கொண்டிருப்பதும் நம்பிக்கை வைப்பதும் எதிர்ப்பதும் பயனற்றது. அவற்றைக் குறித்து இந்தியா கவலைப்படுவதில்லை. அது அவற்றையிட்டுக் கவலைப்படும் நிலையிலும் இல்லை.

இந்தியாவைப் பொறுத்தவரையில் அது உள்நாட்டிலும் சர்வதேச நிலையிலும் பிராந்திய ரீதியிலும் தனக்கு எழுகின்ற நெருக்கடிகளையும் அபாயங்களையும் குறித்தே சிந்திக்கிறது. இது முதலாவது அடுத்தது தனக்கு சர்வதேச ரீதியாகவும் பிராந்திய ரீதியிலும் உள்நாட்டிலும் எத்தகைய நன்மைகள் கிட்டுகின்றன? என்ன வகையான நலன்கள் கிட்டும் என்பதற்கேற்பவே அது அசியற் கொள்கையையும் வெளியுறவுக் கொள்கையையும் இராசதந்திர நகர்வுகளையும் செய்கிறது. இதற்கேற்பவே அதனுடைய நிகழ்ச்சி நிரல்கள் அமைகின்றன.

இதுவே உண்மை. இந்த உண்மை பரகசியமானதும்கூட. பல தடவைகள் இது பகிரங்கமாக வெளிப்படுத்தப் பட்டும் உள்ளன.

ஆனால் இலங்கையின் இனப்பிரச்சினை தொடர்பாக இன்னும் பல ஆண்டுகளுக்கு இப்படியே இந்தியாவின் திட சங்கற்பத்தைக் குறித்தும் கரிசனையைக் குறித்தும் முயற்சிகளைக் குறித்தும் இந்தியத் தலைவர்கள் சொல்லிக் கொண்டிருக்கத் தான் போகிறார்கள்.

இந்தியத் தலைவர்களும் பிரதானிகளும் இலங்கைக்கு வரும் பொழுதெல்லாம் இனப்பிரச்சினை தொடர்பாகவும் அவர்கள் ஏதாவது கதைக்கத்தான் போகிறார்கள். அதேபோல இலங்கையின் அரசியற் தலைவர்கள் இந்தியாவுக்குச் செல்லும் வேளையில் எல்லாம் இலங்கை இனப்பிரச்சினைக்கான தீர்வைப் பற்றிப் பேசத்தான் போகிறார்கள்.

இதெல்லாம் ஒரு சம்பிரதாய பூர்வமான விளையாட்டாக மாறியுள்ளது என்று இப்போது சிங்கள அதிகார வர்க்கத்தினருக்கும் தெரிந்து விட்டது.

பனிப் போர்க்காலத்தில் நிலவிய உலக ஒழுங்கின் காரணமாக - அன்றைய சர்வதேச அரசியல் நிலைமைகளை-யிட்டு இந்தியாவின் அணுகுமுறை தொடர்பாக இலங்கைக்கு அச்சங்கள் இருந்தன.

அத்துடன் தமிழர்களின் ஆயுதந் தாங்கிய அரசியற் போராட்டத்துக்கு இந்தியா வழங்கிய ஆதரவையிட்டும் இலங்கைக்கு நெருக்கடிகளும் இருந்தன. அச்சமும் இருந்தது.

ஆனால் பின்னர் குறிப்பாக 1990 க்குப் பிந்திய நிலைமைகள் முற்று முழுதாகவே இந்தியாவானது இலங்கை அரசை – சிங்களத் தரப்பை - அனுசரித்துப் போகும் ஒரு நிலைப்பாட்டுக்கு வந்துள்ளது. வரவேண்டியதாக உள்ளது என்பதை இலங்கை தெளிவாகவே புரிந்துள்ளது. இந்தியாவைப் பொறுத்தவரை அது தமிழ்த் தரப்புக்கும் சிங்களத்தரப்பினருக்கும் இடையிலான ஒரு அணுகு முறையைக் கடைப்பிடிக்க முற்படுகிறது. தமிழர்களுக்கு அரசியல் அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப் பட வேண்டும் என்று சொல்வதன் மூலம் தமிழ்த்தரப்பு க்கான தன்னுடைய ஆதவைத் தெரிவித்துக் கொள்வது. இதேவேளை ஐக்கிய இலங்கைக்குள் ஒருமைப்பாட்டைச் சிதைக்காத வகையில் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணப்பட வேண்டும். அத்தகைய தீர்வொன்றுக்கு இந்தியா ஒத்துழைக்கும் என்று சொல்வதன் மூலமாக சிங்களத்தரப்பின் உள நிலையிற் கலவரத்தை உண்டு பண்ணாமல் அதைத் தனக்கு நெருக்கமாக வைத்துக் கொள்வது.

இந்தியாவின் இந்த சமாளிப்புத் தனமான நிலைப்பாட்டைத் தெளிவாகவே சிங்கள அதிகாரத் தரப்புப் புரிந்துள்ளது. எனவே தான் அது ஐக்கிய இலங்கைக்குள் தீர்வு காணப்படும் என்றும் அதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன என்றும் ஒரு தோற்றப்பாட்டைத் தொடர்ச்சியாக – ஆனால் வெள்வேறு விதங்களில் வெளிப்படுத்தி வருகின்றது.

இங்கே இந்தியாவுக்கு ஒரு முக்கிய பிரச்சினை தீர்ந்து விடுகிறது. அதனுடைய நலன்கள் பாதுகாக்கப்படுகின்றன.

இன்றைய நிலையில் இலங்கை அரசு இந்தியாவை விட்டு வேறு பிராந்தியங்களின் ஈர்ப்பு விசைக்கு உட்பட்டு விடக்கூடாது என்பதே இந்தியாவின் கவலை. இந்தக் கவலை நீங்க வேண்டுமானால் இலங்கை – சிங்களத்தரப்பு – முகஞ்சுழிக்காதவாறு ஒரு அணுகுமுறையையும் நிலைப்பாட்டையும் இந்தியா மேற்கொள்ள வேண்டும்.

ஆகவே தான் சிங்களத்தரப்பின் - இலங்கையின் - விருப்பத்துக்கு மாறாக இலங்கையின் இனப்பிரச்சினை விசயத்தில் தமிழர்களுக்கு – தமிழ் பேசும் மக்களுக்குச் சாதகமான நிலைப்பாட்டை எடுக்க அது விரும்பவில்லை.

இலங்கையைப் பொறுத்த இந்தியாவின் புரிதல் என்பது. சிங்களத் தரப்பின் முதன்மைப்பாட்டையே கொண்டதாக உள்ளது. அதாவது இலங்கை என்பது சிங்களவர்களின் தலைமைத்துவத்தைக் கொண்டது, அவர்களுடைய விருப்பத்தையே பிரதானமாகக் கொண்டது என்பதாகும்.

இதையே இந்தியாவின் நிலைப்பாடும் நடைமுறையும் அணுகுமுறைகளும் நிரூபிக்கின்றன. இதை மறுத்துரைப்போர் இந்தியாவின் பிற அணுகுமுறைகளைப் பற்றிய ஆதரங்களை முன்வைக்க வேணும்.

ஆகவே இந்தியாவின் அரசியல் நலன்களுக்காகப் பலியிடப்படும் ஒரு விசயமாகவே இலங்கையின் இனப்பிரச்சினையும் இலங்கைத்தமிழ் பேசும் மக்களின் அரசியல் போராட்டங்களும் உள்ளன என்பது தெளிவாகும்.

இதனுடைய நீட்சி இன்னும் நீண்ட காலத்துக்குத் தொடரக்கூடும். இங்கே நாம் இந்தியாவைக் குறைத்து மதிப்பீடுவதாகவோ குறை சொல்வதாகவோ இந்தக் குறிப்பை எழுதவில்லை. பதிலாக இந்தியா ஒரு பிராந்திய வல்லரசு என்ற அடிப்படையில் அது, அதனுடைய நலன்களைக் குறித்தே அக்கறைப் படும் என்ற உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற நொக்கத்திற்காகவே இதை இங்கே குறிப்பிடுகின்றோம்.

ஆகவே இந்தியாவின் அறிவிப்புகளும் அணுகுமுறைகளும் சொல்லும் சேதிகளின் பின்னாலுள்ள சொல்லாத சேதிகள் இலங்கையின் இனப்பிரச்சினைக்கான தீர்வு என்பது இலங்கையர்களின் சொந்த விசயம் என்பதாகவே உள்ளது.

இதற்கப்பால் அது சிங்களத் தரப்பின் முகக்கோணலை விரும்பவில்லை என்பதாகவும் இருக்கிறது. எனவே தமிழர்களின் அரசியல் அணுகுமுறை கள் மீள்பரிசீலனைக்கும் அனுபவ மீள்பார்வைக்கும் உரியதாகிறது. இதை விடுத்து இந்தியாவைக் குறை சொல்வதாலே இழிவு படுத்துவதாலோ நம்பிக்கை கொள்வதாலோ எதுவும் நடந்து விடப் போவதில்லை. அரசியல் அநாதைகளாகுவதைத் தவிர.

# தாய்ப்பால் சுரப்பு எவ்வளவு இருக்கும்?

பிரசவத்தை எதிர்நோக்கி காத்திருக்கும் கர்ப்பிணிப் பெண்களுக்கு பல சந்தேகங்கள் ஏற்படலாம். அவற்றில் முக்கியமானது தாய்ப்பால் சுரப்பு எவ்வளவு இருக்கும்? என்பது.

பொதுவாக குழந்தை பெற்றெடுத்த ஒரு ஆரோக்கியமான பெண்ணுக்கு சுமார் 850 மில்லிலிட்டர் தாய்ப்பால் தினமும் சுரக்கும். இந்த தாய்ப்பால் சுரப்பு காரணமாக அந்த தாயானவள் தினமும் சுமார் 600 கலோரியை கூடுதலாக இழக்க வேண்டியது இருக்கிறது.

சத்தான கீரை வகைகள், காய்கறிகள், பால், பழங்கள், புரதம் மிகுந்த உணவு பொருட்கள், நீர் போன்றவற்றை சரியான விகிதத்தில் அந்த தாயானவள் எடுத்து வந்தால் அவளது தாய்ப்பால் சுரப்பால் ஏற்படுகின்ற கலோரி இழப்பு ஈடு செய்யப்படும்.

அதை தவிர்த்து சத்து குறைவான உணவு வகைகள் அவளுக்கு கொடுக்கப்பட்டால் அவளது உடல் திறனும் பாதிக்கப்படும் தாய்ப்பால் சுரப்பும் குறைந்துவிடும்.

மேலும் தாய்ப்பால் ஊட்டும் பெண்களுக்கு மார்பகத்தின் அளவுக்கும் தாய்ப்பால் சுரப்புக்கும் சம்பந்தம் உண்டா? என்ற சந்தேகமும் ஏற்படலாம்.

உண்மையில் மார்பகத்தின் அளவிற்கும் தாய்ப்பால் சுரப்புக்கும் சம்பந்தமே இல்லை. சிறிய மார்பகம் கொண்ட பெண்ணுக்கு அதிக அளவில் தாய்ப்பால் சுரப்பதும் பெரிய மார்பகம் கொண்ட பெண்ணுக்கு குறைவான அளவில் தாய்ப்பால் சுரப்பதும் நடைமுறையில் நாம் காணும் ஒன்றுதான்.

மார்பகத்தில் உள்ள திசு சுரப்பிகளின் எண்ணிக்கையையும் அவை தூண்டப்படும் விதத்தையும் பொறுத்தே ஒரு பெண்ணுக்கு எந்த அளவுக்கு தாய்ப்பால் சுரக்கும் என்பதை தெரிந்து கொள்ள முடியும்.

குழந்தைக்கு தாய்ப்பால் கொடுக்க வேண்டும் என்கிற ஆர்வம் கூட அந்த பெண்ணுக்கு தாய்ப்பால் சுரப்பு திசுக்களை தூண்டி விடலாம் என்கிறார்கள் பல்துறை நிபுணத்துவம் பெற்ற மருத்துவ நிபுணர்கள்.

# ஆரோக்கியமாக வாழ்வதற்கு...

தூங்கப் போவதற்கு முன் தினமும் கை, கால்கள் முகத்தை கழுவுங்கள் பற்களையும் சுத்தம் செய்யுங்கள்.

சிறிது நேரம் வாய்க்குள் தண்ணீரை வைத்து நன்றாக வாயை கொப்பளியுங்கள்.

தினமும் நன்றாக தூங்குங்கள். மாதத்தில் ஒரு முறையாவது கண்ணாடி முன் நின்று, உங்கள் உடலை பாருங்கள். அப்படி பார்த்தால் உடலில் ஏற்படும் சுருக்கங்களை கண்டறியலாம்.

உணவில் பச்சை காய்கறிகளையும் பழ வகைகளையும் தேவையான அளவு சேருங்கள்.

முடிந்த அளவு வாகன பயணங்களை மேற் கொள்ளாதீர்கள், அதிகமான தூரம் நடந்து செல்ல முயற்சி செய்யுங்கள்.

தினமும் குறைந்தது 50 முறை உட்கார்ந்து எழுவது நல்லது. அப்படி செய்தால் இடுப்பு அழகுப்படும் தொந்தியும் வயிறும் குறையும்.

குளிக்கும் போது எப்போதும் குதிகாலையும் கால் விரல்களையும் தேய்த்து கழுவுங்கள்.

படுக்கைக்குஅருகிலும் வேலை பார்க்கும் இடத்துக்கு அருகிலும் ஒரு பாட்டில் தண்ணீர் எடுத்து வைத்து கொள்ளுங்கள். தேவைப்படும் போதெல்லாம் தண்ணீர் குடியுங்கள்.

முளை விட்ட கடலை சிறு பயறு போன்றவைகளை காலை உணவில் சேர்க்க வேண்டும்.

கை நகங்களை வெட்டி சுத்தம் செய்வதை கடமையாக கொள்ளவும். உறங்கும் போது காட்டன் துணிகளை அணியுங்கள்.

அதிக சூடு அதிக குளிர் உணவுகள் பற்களுக்கு கேடு பயக்கும் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

இரவு இனிப்பு பலகாரங்கள் சாபபிட்டால் மறக்காமல் பற் களை சுத்தப்படுத்தி விடுங்கள்.

இரவில் அதிக நேரம் விழித்திருப்பதும் பகலில் தூக்கம் போடுவதும் ஆரோக்கியத்திற்கு ஏற்றதல்ல. கொழுப்பு நிறைந்த எண்ணெயை உணவில் சேர்க்காதீர்கள் அது உடல் அழகுக்கும்ஆரோக்கியத்திற்கும் கேடு பயக்கும்.

தினமும் காலையில் டீயோ காபியோ குடிப்பதற்கு முன் ஒரு பழம் சாப்பிடுவது நல்லது. தினமும் காலையில் 10 நிமிடமாவது உடற்பயிற்சி செய்யுங்கள்.

# காணி, காவல்துறை அதிகாரங்கள்...

(3ம் பக்கத் தொடர்ச்சி) சிறிலங்கா அரசுத் தலைவர் மீண்டும் ஒரு தடவை பாடியுள்ளதாக தெரிவித்துள்ளது. ஜெனீவா மாநாட்டில் இந்தியாவின் ஆதரவைத் திரட்டிக்கொள்ளும் உத்தியாகவே இந்த வாக்குறுதி சிறிலங்கா அரசுத் தலைவர் வழங்கியுள்ளதாக தெரிவித்துள்ள ஐ.தே.க சிறிலங்கா அரசு வழங்கிய பல உறுதிமொழிகளை நடைமுறைப்படுத்துமாறு அதற்கு அழுத்தம் கொடுக்காமல் இந்தியா அமைதியாக இருப்பது புரியாத புதிராகவுள்ளது என்றும் தெரிவித்துள்ளது.

ஜெனிவா மனித உரிமைக் கூட்டத் தொடரின் போது, தமிழர்களுக்கு நாங்கள் இவ்வாறானதொரு தீர்வை வழங்கவுள்ளோம் எனக் கூறி தப்பித்துக் கொள்வதற்கு சிறிலங்காஅரசு கையாளும் உபாயம் என குறிப்பிட்டுள்ள ஐ.தே.க இதன் போது இந்தியாவும் சிறிலங்காவின் போலி உறுதிமொழிகளை நம்பி அரசுக்கு பக்கபலமாக இருக்கும் எனவும் குற்றம்சாட்டியுள்ளது. இது இவ்வாறிருக்க 13 பிளஸ் குறித்தான தனது கருத்தினை பதிவு செய்துள்ள ரொலோ அமைப்பின் அரசியல் தலைவர் எம்.கே.சிவாஜலிங்கம் போர் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த போது 13 பிளஸ் என்று ஏமாற்றிய மகிந்த அரசு மீண்டும் அதே பல்லவியை பாட ஆரம்பித்துள்ளது என தெரிவித்துள்ளார். ஜெனீவா மனித உரிமைக் கூட்டத் தொடர் முடியும் வரையிலும் தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்து கூறுபோடும் வரையிலும் அரசு பேச்சு நாடகத்தை தொடரவே செய்யும் என குறிப்பிட்டுள்ள அவர் உள்ளக சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் தங்களைத் தாங்கள் ஆளக்கூடிய அதிகாரத்தை சர்வதேசத்தின் உத்தரவாதத்துடன்பெறுவதேஉயிர்பலிகளுக்கு ஈடாகுமெனதெரிவித்துள்ளார்.

# காற்றில் கலந்த அரங்காடல்

நிருபா தங்கவேற்பிள்ளை

மனவெளி கலையாற்றுக்குழு வழங்கிய 15வது அரங்காடல் காண ஐந்து மணிக்கெல்லாம் மண்டத்தில் கரவாது கரைந்துண்ணும் காகத்தைப் போல் கூடி விருந்துண்ணும் இயல்புடைய கலைவிரும்பியர்கள் காத்திருந்த போதும் 15 நிமிடம் தாமதமாகவே நிகழ்ச்சி ஆரம்பமாகியது.

"முதுவேனிற் பதிகம்" எனும் கவிமொழிவுடன் நிகழ்ச்சி ஆரம்பமாகியது. நீண்ட நாட்களுக்குப் பின் திருமாவளவனின் கவிமொழி க. நவத்தின் நெறியாள்கையில் மெலிஞ்சிமுத்தனும் இணைந்து புதிய திசையில் கைவீசி நடக்கத் தொடங்கி விட்ட போக்கின் மொழியலை பொருள் தேடும் முறையில் மாத்திரம் நல்ல கருத்தை புது நிலத்தில் தரவில்லை.

கனடாவில் பேரன் பிறந்த பிறகு தானா தெரியும் அவன் தந்தைக்கும் பாட்டனுக்கும் இக்கனேடிய நிலம் பேரனின் தாய் நிலம் என்று. சத்திய நம்பிக்கையில் தான் உலக வாழ்கை இன்னும் மனிதபண்போடு சுழன்று கொண்டிருக்கின்றது. சத்தியத்தின் பெயரால் இன்னுமொரு நாட்டு மண்ணை தாய் நாடாக ஏற்றுக்கொண்டு பின் தாய் மண்ணை தனியே விட்டு விட்டு வந்த சிந்தனை ஏனோ? ஆராய்ந்து பார்த்தால் மனித வாழ்வும் வளர்ச்சியும் துன்பத்தில் மலர்ந்தவை தான். திருமாவளவனின் கவிமொழி மூவர் மொழிவதை விட மூவரும் தத்தம் சொந்த வெவ்வேறு கருத்தை கவிமொழியில் தந்திருக்கலாம்.

"வேண்டியவர்களுக்கு வேண்டும் என்றால் வேரிலும் காய்க் காம்பிலும் காய்க்காது" என்னும் கருத்தைத் தாங்கியவாறு "பூச்சியப் பெருவெளி" நாடகம் மேடையேறியது. வைக்கம் முகமது பசீரின் சிறுகதையின் ஆங்கில மொழிபெயர்ப்பில் இருந்து தமிழாக்கம் செய்யப் பட்டிருந்தது. நாடகத்தின் கதை ந்தியாவை மையமாகக் கொண்டு அவர்களின் அரசியலை முதலாளித்துவ கோட்பாட்டை மூடநம்பிகையை வெகு ஜன தொடரின் அபிநய போக்கை வெளிப்படுத்தும் இந்த பிம்பங்களின் சுழற்சியை எத்தனையோ முறை இந்திய திரைப்படங்களில், தொலைக் காட்சி நாடகங்களில் நாம் பார்த்தாகி விட்டது. துஷி ஞானப்பிரகாசத்தின் நெறியாள்கையில் மேடையில் தோன்றிய எம்கலைஞர்கள் அனைவரும் சபையோர் ரசிக்கும்படி நாடகத்தைச் சமர்ப்பித்தனர்.

"நாம் அழைக்கும் போது மரணம் எம்மை அழைப்பதில்லை, மரணம் எம்மை அழைக்கும் போது நாம் போக விரும்புவதில்லை." அறிவுக்கு அதிகம் வேலை கொடுக்காமல் புனையப் பட்ட "இறவாமல் பிறவாமல்" நாடகத்தின் கரு இதுவே! "உயிர் எம்முடையதாயினும், அதனை மாய்த்துக் கொள்ளும் உரிமை எமக்கில்லை" என்பதை சிந்தியாமல் குடும்பங்களை விட்டு நிரந்தரமான பிரிய நினைந்து தற்கொலை முயற்சியில் ஈடுபட்டு தோல்வி கண்ட மூவர் அனுமதிக்கப்பட்ட "மன மாற்று இல்லத்தில்" நாடகம் சுழல்கின்றது. அவ்வில்லத்தில் அனுமதிக்கப்பட்ட பின் அங்கிருந்து மூவரும் தப்பிக்க எடுத்த முயற்சி தோல்வியில் முடிய, மீண்டும் "மனமாற்று இல்லத்தில்" அனுமதிக்கப்படுகின்றார்கள். அங்கு மூவரும் எந்தவித தடையும் இன்றி ஒருவருக்கொருவர் உரையாடுகின்றார்கள். ஒருமுறை திட்டமிட்டு தப்ப முற்பட்டவர்களை மீண்டும் அவ்வாறான பிழை நடக்காமல் இருப்பதற்காக ஒரே சூழலில் இப்படியான இல்லங்கள் வைத்திருப்பதில்லை. அத்துடன் அங்கு வருபவர்களின் சூழல், வயது, ஆண், பெண்... இப்படிப் பல விடையங்கள் கருத்திற் கொள்ளப்படும். நாடகத்தில் வருவது போன்று கடுமையான போக்குடன் அங்கு கடமை புரிபவர்கள் இருக்க மாட்டார்கள். அவர்கள்பாசத்தின் வடிவமாய், பொறுமையின் இலக்கணமாய் இருப்பார்கள். அவ் இல்லத்திற்கு நான்காவதாக ஒருவர் வந்து இணைகின்றார். அவரால் மூவராக இல்லத்தில் இருந்த ஒருவர் தற்செயலாக தள்ளப்பட்டதால் மரணத்தை எய்துகின்றார். நாடக முடிவில் மீண்டும் மூவரும் அதாவது "கொலையாளி" உட்பட இறந்தவர் இறந்தது தெரியாமல் எப்போது வருவார் என்று விசாரிக்கின்றார்கள். "கொலையாளி" வேறு இல்லத்திற்கோ அல்லது சிறைக்கோ மாற்றப் படாமல் இருப்பது தான் ஆச்சரியம்? பல்வேறு அமைப்புக்கள் அலை மோதும் இக்கனடா நாட்டிலே அவர்களிடமிருந்து ஆலோசனைகளையும், கருத்துக்களையும் பெற்று பின் தெளிவிலும் கையாளும் முறையில் எடை போட்டு நிறுத்துப் பார்த்த பின்பே இந்நாடனத்தை மேடையேற்றியிருக்க வேண்டும்.

கனடாவில் மட்டுமல்லாமல் உலகொங்கும் மக்கள் பாதிக்கப் பட்டுக் கொண்டிருக்கின்ற மன நோய் "முரண் மூளைநோய்" பற்றிய விழிப்புணர்வு பொது மக்களிடம் போதியளவு இல்லை. இந்நோயால் பாதிக்கப்பட்டவரின் வாழ்க்கையை நடன மூலம் பிரதிபலிக்க முற்பட்டது "மண் மேல் தொலையும் வேர்கள்". அழகுபட கூறுகின்ற ஆற்றல் இல்லாததனால் பார்வையாளரின் கவனத்தை கவரமுடியவில்லை. மனதில் எழும் கற்பனை அல்லது பொய்த்தோற்றம், உண்மையான சூழல் வாழ்வின் வேறுபாட்டை உணர முடியாமல் இருக்கும் இந்நோயாளிகளின் வாழ்க்கைப் பயணத்தை நாட்டிய நாடக மூலம் திறம்பட எடுத்துக்காட்டியிருக்க முடியும். இந்நோயால் பாதிக்கப்பட்டவர்கள் எதிர்கொள்ளும் நிலைகளாக தனிமைப்படுத்தப்படல் அவதுாறுக்குள்ளாதல், எதிர்பார்ப்புகள், நம்பிக்கையிழப்புக்களை அபிநயம் மூலம் காட்டியிருக்க முடியும்.

நிகழ்ச்சியை நிறைவுக்குக் கொண்டு வந்தது, செழியனின் ஆக்கத்திலும் அ. புரந்தகனின் இயக்கத்தில் கதைக்களம் புரியாத "சவரக் குறிப்புகள்" நாடகம். பூங்காவொன்றில் அமர்ந்திருந்து நாடகம் எழுத முனையும் நாடக எழுத்தாளராக குரும்பசிட்டி இராசரத்தினம் பூங்காவில் சந்திக்கும் ஒவ்வொருவரையும் அவர் தான் எழுதும் நாடகத்தின் கதாபாத்திரமாக்குவது நாடகத்தை சோர்வில்லாமல் நகர்திச் சென்றது. கதைக்களத்தில் சொல்லப்பட்ட நாடு இலங்கையா அல்லது கனடாவா என்பதில் பார்வையாளர்கள் மத்தியில் ஒரு குழப்பம். அது இராணுவவீரனால் பாதிப்புக்குட்பட்ட "மலையாளி" பாத்திரத்தின் பின் ஏற்பட்டது. கதைக்களம் இலங்கையில் சொல்லப் பட்டிருந்தால், கதைக்கு "மலையாளி" பாத்திரத்தின் தேவை என்ன? கதைக்களம் கனடாவில் சொல்லப்பட்டிருச்தால் நம்பகத்தன்மை கேள்விக்குறியாகின்றது. நாயுடன் பூங்காவிற்குற்கு உலா வந்த பெண் பாத்திரம் கனடாவை நினைவுபடுத்திய நொடியில்.....கூர்க்கா உடையில் வந்த இரு காவலாரையும் நாடகம் இராணுவவீரர்களாக சித்திரித்திருந்தது. அவர்களில் ஒருவரை அவர் சொல்லும் வசனத்தை வைத்து அதாவது "நாளை நமதே..." என்ற சினிமா பாணியில் இவர் தான் மலையாளின் குடும்பத்தைச் சீரழித்தவர் என்று கண்டு கொண்டார் பூங்காவில் நாடகம் எழுத முனைந்தவர். மலையாளிக்காக சட்டத்தை கையில் எடுத்து இராணுவத்தை கொலை செய்கின்றார் பூங்காவில் நாடகம் எழுத முனைந்தவர். "ஒருவருக்காக மற்றுமொருவர் சட்டத்தைக் கையில் எடுக்கலாம்" என்பதை ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. "வாருங்கள் பார்வையாளர்களே! நாடனத்தொடரில் நீங்களும் பாத்திரங்களே!" என்று கொஞ்சம் வித்தியாசமாய் மேடையில் சொல்ல முனைந்த கருத்து தோற்று விட்டது.

மனித சமுதாயத்தின் பெரு வளர்ச்சிக்காக இல்லாவிடினும் எதனுள்ளும் அடங்காமல் தம் முயற்சியால் ஆற்றல் புரிந்து வந்த "அரங்காடல்" காதில் விழுமுன்னே காற்றோடு கலந்த தேனோ?

# ஞானவழி முறையும் நானும்

"மனிதன் ஒரு ,ரசாயன கலவை, உயிரியல் கூர்ப்பினால் ஏற்பட்ட ஒன்று." என்னும் வாக்கியம் பலமுறை வாசித்தும் கேட்டும் பலர் அதில் நம்பிக்கை வைத்தும் இருக்கிறார்கள். இது ஒரு உண்மையாக இருக்கலாம், ஆனால் இது படு பொய். எனக்குத் தெரிவிக்கப் பட்ட ஞானவழிமுறை அனுபவம் நான் வெறும் இரசாயன கலவையும் அல்ல, வெறுமனே குரங்கிலிருந்து வந்தவனும் அல்ல, அதற்கு மேலானவன் என உணர வைத்தது. அது ஒரு பண்பாற்றலுடைய முழுமையை என்னுள்ளே தோண்டி எடுத்தது. முற்றாக புதிய அனுபவம். என்னை நிறைவு பெற்ற ஓய்வான நிம்மதியான திருப்தியடைந்தவனாக்கியது.

இது ஒரு பயன்தரும் கற்கும் வழிமுறை

தினமும் இந்த தியான கைமுறை மூலம் எனக்கு கிடைக்கும் அனுபவம், ஒரு வியக்கத்தக்க கற்கும் முறை. விழிப்புணர்வின் இரண்டு மட்டங்களினூடாக எனக்குத் தெளிவைத்தருகிறது - அகப்பார்வை, அகக்காட்சி. நான் ஒரு பிரச்சினையில் நெருங்கி மூழ்கி இருக்கும் போது அகப்பார்வை மூலம் எனக்கு என்னை எவ்வாறு இது பாதிக்கும் - மகிழ்ச்சி அல்லது கவலை, என உணர வைக்கிறது இதில் ஓரளவு, சொந்த உணர்வுகள், உள்ளத்தில் ஏற்கனவே பதிந்தவை, மனக்கிளர்சி, சார்ந்தவை, கற்பனை இவையின் சாயல் இருக்கும்.

விழிப்புணர்வின் இரண்டாவது மட்டம், அகக்காட்சி. என் பிரச்சினையிலிருந்து துாரச்சென்று ஒரு புறம்பான நிகழ்வாக என்னால் அதை பார்க்கமுடிகிறது அது என்மக்கள் குழுவில் சமுதாயத்தில் கலாச்சாரத்தில் என்ன கருத்தை ஏற்படுத்துகிறது என அறியக்கூடியதாக இருக்கிறது.

இறுதியாக ஞானவழியில் தியானம் செய்வது அந்த அனுபவத்திற்கும் என் வாழ்கைக்கும் உள்ள சம்பந்தத்தை காண உதவுகிறது. எனது வாழ்வின் நோக்கத்திற்கு இது உதவியாக இருக்குமா? முழுமையின் ஒரு பகுதி இதுவானால் ஏற்கிறேன் அல்லாவிடில் தள்ளிவைக்கிறேன். என் நித்திய உலக வாழ்கையில் பலருக்கு பல விடயங்களுக்கு நான் விருப்பு வெறுப்புகளால் கட்டுபடுத்தப்பட்டிருக்கிறேன். அவற்றில் நான் அதிகமாக ஈடுபட்டால் மனத்தின் இருமையால் ஏற்படும் முரண்பாடுகளில் சிக்கிக் கொள்வேன். என்னைச்சுற்றி நிறைந்திருக்கும் குழப்பங்கள், முரண்பாடுகளிலிருந்து விடுவித்து அவற்றிற்கு அப்பால் என்னை கொண்டு செல்ல தியானம் உதவுகிறது.

ஏன் இந்த வழிமுறை இன்று மிக அவசாமாகிறது?

இன்றைய மனிதன் தன்னுள் மையம் லைலாதவன். சுற்றியுள்ள உலகசாதனங்களால் ஆட்டி வைக்கப்பட்டு வேறு திசைக்கு திருப்பப்பட்டுள்ளான் - பல விஞ்ஞான அதிசய கண்டு பிடிப்புகளிருந்தும் அவன் ஒரு பலிகடா, ஆசானல்ல.

நன்மையை வெறுக்கும், உள்ளூடற்ற வெறுமனே மதிப்பற்ற வெற்று, மந்தை வாழ்வு வாழும் மனிதன் தாங்குவதால் உலோகாயதம் தலைதுாக்கியுள்ளது இதனால் தொழில்நுட்பமே கடவுளாகியது. வெற்றியடைந்த உலோகாயதம், மனிதனின் மெய்யுணர்வு நயத்தை பிளந்து விட்டது. அவன் ஒரு இரட்டை வாழ்வு வாழ்கிறான். - உதட்டளவில் கடவுளிற்கு சேவை, உண்மையில் தீய வழிச் செல்வத்திற்கு பக்தி.. சமயம் ஒரு செலவுள்ள புற அமைப்பாகி விட்டது,- அகவாழ்வு, உண்மை அனுபவம் இல்லாத வெறும் புறக்காட்சி. மனிதனின் இந்த விலகள், தொடர்பறுந்த நிலையின் விளைவு, மார்க்சியம். இது அதிசயமல்ல.

ஆனால் மார்க்சியமும் எல்லா நோய் தூர்கும் சஞ்சீவினி அல்ல. மனிதன் தனக்கே அன்னியன் ஆகிவிட்டான்.போலி உணர்வுகொண்ட ஒரு இயந்திரமனிதன். தன்சுபாவம், இயல்பானநிலை தன்வேர்களிலிருந்து வெட்டப்பட்டுள்ளான்.

படைத்தவன் தன் எல்லையில்லா கருணையில் மனிதனின் நிறைவுக் காக கொடையாக தரப்பட்ட உயிர்ச்சக்தி அடிமைபடுத்தப்பட்டு கொச்சைபடுத்தப் பட்டு இழிந்தநிலையில் சமுதாயத்தில் மூழ்கி விட்டது. குரு தந்த ஞான வழி முறை எம்முள் இருக்கும் உயிர்சசக்தியை விடுவித்து இயற்கையான முடிவடைய வைக்கிறது. நாம் அன்புடன் இயல்பாக சமுதாயத்தில் இயற்கையான ஓட்டத்தில் வாழ உதவுகிறது. இது வெறுப்பு, பயம் வற்றினால் உருவாகும் உடமையாக்க அல்லது ஒழித்து அழிக்க ஆத்திரப்படும் மதியற்ற மிருக வேகத்திலிருந்து எம்மை விலத்தி வைக்க உதவுகிறது.



உலகசரித்திரத்தில் மனிதனின் தெய்வீகத்திற் உயிருக்கு அதிகளவு மேம்பாட்டை மதிப்பை கொடுத்தது இந்தியா. காலத்திற்கு காலம், பல சத்குருக்களை முன்னிலைபடுத்தி மனிதனுள் பேணப் பட்டுள்ள பெருஞ்சிறப்பை வெளிக் கொணரவைத்து பிரகடணப்படுத்தியது. ஒரு இருண்டஉலகில் ஆத்மீக சூரியனான எனது குரு இன்று உலகிற்கு இந்தியா தந்த அதிபெரும் கொடை.

(அன்று பேராமிரவர் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதியதின் தமிழாக்கம்)

(மானிப்பாய் இந்துக்கல்லூரி முன்னாள் அதிபர் திரு மு.பேராமிரவர் அவர்களது 18வது ஆண்டு நினைவுநாளையொட்டி இக்கட்டுரை பிரசுரமாகின்றது)

# சகல தோஷங்களையும் நீக்கி சந்தோஷ வாழ்வு தரும் பிரதோஷ விரதம்

தோசஷம் என்பது மிக மோசமான பாவ வினை. இதிலே நாக தோசஷம் சர்ப்ப தோசஷம் எனப்படுவது மிக கடுமையான தோசஷம். இந்தத் தோசஷம் உள்ளவர்களுக்கு திருமணம் நிறைவேறாது தடை உண்டாகும். புத்திரப் பேறு இல்லாமலும் தொழில் தடைகளும் காரியங்கள் நிறை வேறாமையும் உண்டாகும். எதிரிகள் தொல்லை உண்டாகும்.

இந்தத் தோசஷம் உள்ளவர்கள் அதற்குரிய பரிகாரத்தை செய்தால் தோசஷம் நீங்கும். ஆனால் பரிகாரம் செய்யும் போது கண்டிப்பாகச் சிவாலயங்களிலே தான் செய்ய வேண்டும்.

அடுத்து கிரக தோசஷம் எனப்படுவது கிரகங்களால் ஏற்படும் தோசஷம். சர்ப்ப தோசஷம் என்பது இராகுவாலும் கேதுவாலும் ஏற்படுவது

சனி தோசஷம் என்பது சனியால் ஏற்படுவது.

வியாழதோசஷம் என்பது வியாழனால் உண்டாவது.

இந்தத் தோசஷங்கள் ஏற்படுவதற்குக் காரணம் நாம் முன்னைய பிறவிகளிலே செய்த தீய வினைகளின் காரணமாக அது இப்பிறவியிலே அனுபவிக்கின்ற நேரம் வரும் போது அதை அனுபவிக்கின்றோம்.

எந்த விதமான தோசஷமானாலும் பிரதோசஷ விரதம் பிடித்தால் நீங்கும். பிரதோசஷ விரதம் என்பது மாதத்தில் இரண்டு முறை வருகிறது. இந்த நாளில் தேவர்கள் விண்ணிலிருந்து பூமிக்கு வந்து சிவாலயங்கள் தோறும் சென்று பிரதோசஷ பூசை பார்த்து வழிபடுகிறார்கள். தேவர்கள் வழிபடும் காலமான பிரதோசஷ காலத்தில் மானுடர்களும் விரதம் இருந்து வழிபடும் போது அவர்களுடைய தோசஷமும் கொஞ்சம் கொஞ்சமாக விலகுவதோடு தேவர்களின் ஆசிகளையும் பெறுகிறார்கள், தேவர்களைப் போன்று வாழும் பாக்கியம் கிடைக்கின்றது.

பிரதோசஷ விரதம் பிடிப்பவர்கள் பெரும்பாலும் காலையிலிருந்து எதுவுமே சாப்பிடாமல் உபவாசம் இருந்து மாலையில் சிவாலயம் சென்று நந்தி எம்பெருமானுக்கும் சிவனுக்கும் நடைபெறுகின்ற அபிசேஷகம் பூசை பார்த்து அப்பிரதட்சண வலம் வந்து நந்தியின் கொம்புகளுக்கு ஊடாக சிவனை வணங்கி தங்களுடைய வேண்டுதல்களை நந்தியின் காதுக்குள் சொல்லி வணங்கி பிரதோசஷ உற்சவம் பார்த்த பின்பே உணவைச் சாப்பிடுவார்கள்.

சிவ வழிபாடு சிவ விரதங்கள் எல்லாமே கண்டிப்பாக சிவாலயங்களிலே தான் செய்ய வேண்டும், அப்படிச் செய்பவர்களுக்குத் தான் சரியான பலன் கிடைக்கும். சிவ விரதங்களில் சிவ ராத்திரிக்கு இணையான விரதம் பிரதோசஷ விரதமாகும். பிரதோசஷ விரதத்தை தொடர்சியாகப் பிடிப்பவர்களுக்கு தோசஷங்கள் விலகி குடும்பத்தில் நன்மைகள் உண்டாகும்.

தமிழ்நாட்டில் சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு சிவாலயங்களில் அதிக அளவு பக்தர்களைக் காண்பது அரிது. ஆனால் இப்போது அங்குள்ள சகல சிவாலயங்களிலும் பிரதோசஷ நாட்களில் அதிகளவு பக்தர்களைக் காணலாம். இப்பொழுது தமிழ்நாட்டில் சிவ வழிபாடு அதிகரித்து வருகிறது.

தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கை முன்னேற்றம் அதிகரித்து வருகிறது. இலங்கைத் தமிழர்களாகிய நாம் சிவ வழிபாட்டை மேன்மைப்படுத்தாமல் சிறுதெய்வ வழிபாட்டை மேன்மைப் படுத்தி சிறுதெய்வங்களின் ஆலயங்களில் சிவனையே சிறு தெய்வமாக வைத்து வழிபடுகின்றோம். இது மிக மிகத் தவறான வழிபாடு மட்டுமல்ல சிவனை கொச்சைப்படுத்தி சைவ சமயத்தையும் மதிக்காதவர்களாக இருக்கிறோம்.

அண்மைக் காலத்தில் இலங்கைத் தமிழர்களாகிய நம்மவர்கள் கட்டிய சிறு தெய்வங்களில் ஆலயங்களில் சிவனை சிறு தெய்வம் போல வைத்து அங்கே பிரதோசஷ விரத பூசை நடாத்துவது உண்மையான முறை தெரியாதவர்கள் செய்கின்ற செயலாகும்.

இதனால் மக்கள் ஏமாற்றப்படுவதோடு அப்படியான இடங்களில் வழிபடும் பக்தர்கள் உண்மையான பலனை இழக்கிறார்கள்.

இறைவனை எப்போதும் முதன்மையாக வழிபட வேண்டும். எல்லா நாட்டவர்களுக்கும் இறைவனாக இருப்பவரை தென்நாட்டவர்களாகிய நாம் சிவன் என்கிறோம். 'தென்நாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' எல்லா நாட்டவரும் இறைவனைத் தான் வழிபடுகிறார்கள்.



புலோலியூர் கலாநிதி
அடியார் விபுலானந்தா
சைவத்தமிழன் -கனடா

தமது நாடுகளைத் தாமே ஆளுகின்ற பாக்கியத்தைப் பெற்றிருக்கிறார்கள்.

சைவ மக்களாகிய நாம் இறைவனோடு இறைவி இருப்பதை தெரிந்து இறைவனையும் இறைவியையும் சிவலிங்க மூர்த்தியாக ஆலயங்களில் மூலத்தானத்தில் வைத்து வழிபடுகிறோம். சைவ சமயம் மெய்ச்சமயம் என்பதை எம் சமயகுரவர்கள் நிரூபித்துள்ளார்கள். சைவநீதி மேன்மையானது.

சைவநீதியை மேன்மைப்படுத்துவோர் குடும்பத்தில் அன்போடு குதூகலமாக வாழ்வர். அன்பைத் தருவது நமசிவய, எல்லோரும் சிறப்போடு வாழ்க!

